# GEOGRAPHY

OF THE

# MADRAS PRESIDENCY

IN TAMIL,

**ILLUSTRATED WITH**

**A LARGE MAP OF THE PRESIDENCY,**


BY

E. MARSDEN, B.A.,

*Inspector of Schools, Central Circle (Retired).*


---

# சென்னை இராஜதானி

# பூகோள சாஸ்திரம்.

இது

பிரைமெரி பரீக்ஷைக்கிணங்க

ஈ. மார்ஸ்டன், பி. ஏ., என்பவரால்

எழுதப்பட்டது.

---

Approved by the Text-Book Committee.

---


MACMILLAN & CO., LIMITED:

LONDON, BOMBAY AND CALCUTTA.

1904.

*Price, 5 Annas.*]



[விலை, அணா ௫

*Apply to* THE S. P. C. K. DEPOSITORY, *Vepery, Madras.*

THIRTEENTH REVISED EDITION.] [S. P. C. K. PRESS, MADRAS.




வங்காள
ராஜதானி

# GEOGRAPHY

OF THE

# MADRAS PRESIDENCY

IN TAMIL

**ILLUSTRATED WITH**

**A LARGE MAP OF THE PRESIDENCY.**

BY

E. MARSDEN, B.A.,

*Inspector of Schools, Central Circle (Retired).*

---

# சென்னை இராஜதானி

# பூகோள சாஸ்திரம்.

இது

பிரைமெரி பரீக்ஷைக்கிணங்க

ஈ. மார்ஸ்டன். பி. ஏ., என்பவரால்

எழுதப்பட்டது.

---

**Approved by the Text-Book Committee.**

---

MACMILLAN & CO., LIMITED:

LONDON, BOMBAY AND CALCUTTA.

1904.

*Price, 5 Annas.*]  [விலை, அணா ௫.

THIRTEENTH REVISED EDITION.] [S. P. C. K. PRESS, MADRAS.



## முகவுரை.

சென்னை வித்தியாவிஷய விதிகளின்படி பிரைமெரி பரீக்ஷைக்கு பூகோள பாடத்தில் வேண்டிய விஷயங்களெல்லாமடங்கிய இப்புத்தகத்தின் இப்பதின்மூன்றும் பதிப்பில் செவ்வையாய்ப் பரிசோதித்துத் திருத்தியும், அங்கங்கே மாற்றியும், நூதன மாறுபாடுகள் சேர்த்து மிருக்கிறது. இப்புத்தகம் இப்போது லண்டன் நகரத்து மாக்மில்லன் கம்பெனியாரால் பிரசுரம் செய்யப்படுகிறது. அவர்கள் மூலமாய் வேலைதீர்ந்த சென்னை ராஜதானி படமும் சில சித்திரப்படங்களும் இப்பதிப்பில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## அட்டவணை.

### முதலாம் பாகம்.

### சென்னை இராஜதானி விருத்தாந்த சங்கிரகம்.







# சென்னை இராஜதானி.

## 1-வது. அத்தியாயம்.

### இந்துதேசத்தின் இயற்கை அமைப்பு.

ஆசியாகண்டத்தின் தென்பாகத்திலுள்ள இந்துதேசமானது, அக்கண்டத்தின் மற்றத் தேசங்களிலிருந்து உன்னதமான மலைத்தொடர்களால் பிரிக்கப்பட்ட ஒரு பெரிய தீபகற்பம். இத்தேசத்திற்கும் ஆப்கானிஸ்தானம், பெலுசிஸ்தானம் இவைகளுக்கும் மத்தியில் ஸுலைமான், ஹாலாமலைகள் வடமேற்கிலும், திபேத்திற்கும் இத்தேசத்திற்கும் மத்தியில் இமயமலை வடக்கிலும், எல்லைகளாக இருக்கின்றன. மற்றத் திசைகளில் கிழக்கில் வங்காள விரிகுடாவும், தெற்கில் இந்துமகா சமுத்திரமும், மேற்கில் அரபிக்கடலுமாக சமுத்திரத்தால் சூழப்பட்டிருக்கின்றது. நீளமும் அகலமும் ஏறக்குறைய ஓரளவாய் இது 1,900 மைல் நீளமுள்ளது இதன் பரப்பு 15 லக்ஷம் சதுரமைல்.

**சமவெளிகள்:**—இமயமலைக்குத் தெற்கிலுள்ள இந்தியாவின் வடபாகம் ஒரு பிரமாண்டமான சமவெளி. ஸிந்துநதிக்கும் கங்கைநதிக்கும் மத்தியிலுள்ள இவ்வெளியின் மேற்குப் பாகம் ராஜபுதனம் என்னும் ஓர் பாலைவனம். இச்சமவெளியின் கிழக்குப் பாகமாகிய கங்காதீரம் அதிக செழிப்பாயும் மிகக் குடியேறினதாயு



மிருக்கிறது. தென்னிந்தியாவில் கிழக்குக் கரையை அடுத்த சமவெளிக்கு கர்னுடகமென்றும், மேற்குக் கரையை அடுத்த சமவெளிக்கு கொங்கணமென்றும் பெயர். கொங்கணத்தின் அகலம் 50 மைல். அதில் விசேஷமான நதிகள் ஒன்றுமில்லை. அதைக்காட்டிலும் கர்னுடகம் அதிக விசாலமான சமபூமி. இதில் கோதாவரி, கிருஷ்ணு, காவேரி என்னும் முக்கிய நதிகளும், வேறு பல பெரிய நதிகளும் ஓடுகின்றன. இதைச் சேர்ந்த சென்னை இராஜதானியின் தென்பாகம் 100 மைலுக்கு மேற்பட்ட அகலமுள்ளது.

**பீடபூமி:** — தென்னிந்தியாவின் மத்தியபாகம் தக்ஷணம் என்னும் ஒரு பெரிய பீடபூமி. இதற்கு வடக்கே விந்தியமலையும், கிழக்கில் கிழக்குத்தொடர்ச்சிமலையும், மேற்கில் மேற்குத்தொடர்ச்சிமலையும் இருக்கின்றன. இதன் மத்தியில் ஆங்காங்கு துர்க்கங்களென்று சொல்லப்பட்ட அநேக சிறு மலைக்குன்றுகள் இருக்கின்றன. இத்தக்ஷணத்தின் தென்பாகமாகிய மைசூர் பீடபூமியானது மற்றப் பாகங்களிலும் மிகவுயர்ந்தது. இதில் பாயும் நதிகள் மேற்குத்தொடர்ச்சிமலைகளில் உற்பத்தியாகி கீழ்த்திசையாய் ஓடுவதினுல் மேற்கிலிருந்து கிழக்கில் வரவர பூமி தாழ்ந்திருக்கிறதெனத் தெரியவருகிறது.

**மலைகளும், குன்றுகளும்:**—இந்தியாவுக்கும் திபேத்து பீடபூமிக்கும் மத்தியிலுள்ள **இமயமலை** இவ்வுலகத்திலுள்ள மலைகளில் மிகப் பெரிது. இமயமலை என்பதற்குப் பனிமலை யென்றருத்தம். இதன் நீளம் 1,750 மைல். இதன் சிகரங்களில் முக்கியமானவை. (1) எவரஸ்ட்டு; அதின் உயரம் 29,000 அடி. (2) கிஞ்சின் ஜங்கா, 28,176 அடி. (3) தவளகிரி 28,000 அடி.

**ஸுலைமான்மலை:**—இது ஆப்கானிஸ்தானத்திற்கும் இந்தியாவிலுள்ள பஞ்சாப்பிற்கும் மத்தியிலுள்ளது.

**ஹாலாமலை:** — பெலுசிஸ்தானத்திற்கும் விந்துதேசத்திற்கும் மத்தியிலிருக்கிறது.






**ஸிவாலிக்மலை:**—இது வடமேற்கு மாகாணங்களில் கங்கைக்கும் சத்லெஜ் நதிக்கும் மத்தியில் இமயமலையைப்போலவே தென்கிழக்காயுள்ளது.

**அரவலிமலை:**—ராஜபுதனப் பாலைவனத்து மத்தியில் வடகிழக்கில் 300 மைல் நீளமுள்ளது.

**விந்தியமலை:**—கங்காதீரத்துக்கும் தக்ஷண பீடபூமிக்கும் மத்தியில் கிழக்கு மேற்கில் 350 மைல் நீளமுள்ளது. அது 1,500 முதல் 4,500 அடிவரையில் உயரமுள்ளது. இதற்கும் ஸாத்பூராமலைக்கும் மத்தியிலுள்ளது நருமதைதீரம்.

**ஸாத்பூராமலை:**—விந்திய மலையைப்போலவே கிழக்கு மேற்கில் 600 மைல் நீளமுள்ளது. இதற்குத் தெற்கில் தபதிநதி பாய்கிறது.

**மேற்குத்தொடர்ச்சிமலை:**—தக்ஷணத்தின் மேற்கெல்லையாகிய இம்மலை 1,000 மைல் நீளமுள்ளது. இது நீலகிரிக்குப் பக்கத்தில் கிழக்குத் தொடர்ச்சி மலையுடன் சேருகிறது. நீலகிரியின் உன்னதமான சிகரம் 8,640 அடி உயரமுள்ள தொட்டபெட்டா. நீலகிரிக்குத் தெற்கே 25 மைல் அகலமுள்ள பாலக்காட்டுக் கணவாயென்று ஒரு கணவாயிருக்கிறது. அதன் உயரம் ஏறக்குறைய 1,000 அடி. இம்மலைத்தொடர்ச்சியின் தெற்கிலிருக்கும் ஆனைமலை யென்பதின் உன்னதமான சிகரத்திற்கு ஆனைமுடி என்று பெயர். இதன் உயரம் 8,850 அடி. இது இமயமலைக்குத் தெற்கிலுள்ள மலைகளின் சிகரங்களில் உயர்ந்தது. இதற்குத் தெற்கிலிருப்பது திருவனந்தபுரத்து மலைகள். இவை வரவர உயரத்தில் குன்றி கன்னியாகுமரி முனையில் முடிகின்றன.

**கிழக்குத்தொடர்ச்சிமலை:** — இது வடக்கில் ஒரிஸா நாடுதொடங்கி தெற்கில் நீலகிரிவரையிற் சென்று தக்ஷணத்திற்குக் கிழக்கெல்லையாயிருக்கின்றது. மேற்குத் தொடர்ச்சிமலையைவிட உயரத்தில் தாழ்ந்தது. இம்மலை சென்னை இராஜதானியின் பல ஜில்லாக்களிலும் வெவ்வேறு பெயர்பெற்று வழங்குகின்றது. கஞ்சத்தில்



மலையமலை என்றும், விசாகப்பட்டணத்தில் பாலகொண்டா என்றும், கோதாவரியில் பாபிகொண்டா என்றும், நெல்லூர், கடப்பை, கர்நூல் இந்த ஜில்லாக்களில் வெலிகொண்டா என்றும், வடஆற்காட்டில் நகரி என்றும், மைசூரிலும் கோயம்புத்தூரிலும் பிளிகிரி ரங்கன் மலைகளென்றும் பெயர்கள் வழங்குகின்றன.

**நதிகள்:**—இந்துக்களுடைய விசேஷ புண்ணிய நதியாகிய கங்கைநதியானது இமயமலையிலுள்ள கங்கோத்திரியில் உற்பத்தியாகி, வட இந்தியா சமவெளிவழியாய் 1,550 மைல் தூரம் தென் கிழக்காய் ஓடி வங்காளக் குடாக்கடலில் விழுகிறது. இதன் உபநதிகள்: தெற்கே யமுனை, சோனை; வடக்கே இராம்கங்கா, கௌமதி, கோகிரா, கண்டகி, கூசை; யமுனைக்கு உபநதி சம்புல்.

**பிரமபுத்ரநதி:**—இமயமலைக்கு வடக்கே உற்பத்தியாகி திபேத்துநாட்டின் வழியாய் கீழ்த்திசையிற்சென்று இமயமலையின் கிழக்குக் கோடியைச் சுற்றி தென்மேற்குத் திசையாய் அஸ்ஸாம், தென் பங்காளம் இவைகள் வழியாக ஓடி வங்காளக் குடாக்கடலில் சங்கமமாகிறது. இதன் நீளம் 1,400 மைல்.

**சிந்துநதி:**—திபேத்தில் இமயமலைக்கு வடக்கிலுள்ள கைலாச பர்வதத்தில் உற்பத்தியாகி திபேத்து, காஷ்மீர் இந்நாடுகள் வழியாய் ஓடி இமயமலையின் மேற்குக் கோடியைச்சுற்றி பஞ்சாபு, சிந்துநாடுகள் வழியாய்ப் பாய்ந்து அரபிக்கடலில் சங்கமமாகிறது. இதன் நீளம் 1,800 மைல்; மேற்குப்புறத்தில் காபூல் நதியும், கிழக்குப்புறத்தில் ஜீலம், சீநாப், இரவி, பீயாஸ், சத்லெஜ் இவ்வைந்து நதிகள்கூடிய பஞ்சநதியும் சிந்துவின் உபநதிகள்.

**நருமதைநதி:**—சாத்பூராமலைக்குக் கிழக்கே உற்பத்தியாகி விந்திய பர்வதத்திற்கும் சாத்பூராமலைக்கும் மத்தியில் மத்தியமாகாணங்களின் வழியாயும், பம்பாய்



இராஜதானியின் வடபாகத்தின் வழியாயும் மேற்றிசையாய் 800 மைல் ஓடி காம்பே குடாக்கடலில் விழுகிறது.

**தபதிநதி:**—இது சாத்பூராமலையின் கிழக்குக் கோடியில் உற்பத்தியாகி அந்த மலைத்தொடருக்குத் தென்புறமாக மத்தியமாகாணம், பீரார், பம்பாய் இராஜதானியின் வடபாகம், இந்த நாடுகள் வழியாய் 450 மைல் ஓடி சூரத்துக்குச் சமீபமாக அரபிக் கடலில் சங்கமமாகிறது.

**மஹாநதி:** — மத்திய மாகாணங்களில் உற்பத்தியாகி அம்மாகாணங்களின் வழியாயும், ஒரிஸா வழியாயும் கீழ்த்திசையாய் 520 மைல் ஓடி ஜகநாதத்திற்குச் சமீபத்தில் வங்காளக் குடாக்கடலில் சங்கமமாகிறது.

**கோதவரிநதி:**—பம்பாய் இராஜதானியின் வடபாகத்தில் மேற்குத்தொடர்ச்சிமலையில் உற்பத்தியாகி ஐதராபாத்தின் வழியாய் தென்கிழக்காக ஓடுகிறது. பின்பு ஐதராபாத்துக்கும் மத்திய மாகாணங்களுக்கும் மத்தியில் இவைகளுக்கு எல்லையாக கிழக்குத்தொடர்ச்சிமலை வரைக்கும் போய், அதற்குப்பின் கோதாவரிஜில்லா வழியாய் கீழ்த்திசையாய்ப் பாய்ந்து வங்காளக் குடாக்கடலில் சங்கமமாகிறது. இதன் வடகரையிலுள்ள உபநதிகள் (1) இந்திராவதி, (2) பிரன்ஹீதா. பிரன்ஹீதாவின் உபநதிகள் பீராருக்கும் மத்திய மாகாணங்களுக்கும் இடையிலுள்ள (1) வரதா, பீராருக்கும் ஐதராபாத்துக்கும் மத்தியிலுள்ள (2) பைன்கங்கா, மத்திய மாகாணங்களின் மத்தியில் செல்லுகிற (3) வைன்கங்கா. கோதாவரியின் தென்கரையிலுள்ள உபநதிகள் ஐதராபாத்தின் வடமேற்கு நாடுகளில் பாய்கிற (1) பூர்ணா, (2) தத்ணா, ஐதராபாத்தின் மத்தியில் ஓடுகிற (3) மஞ்சீரா.

**கிருஷ்ணாநதி:**—பம்பாய் இராஜதானிக்கு மத்தியிலுள்ள மகாபிலேசுவரத்தில் உற்பத்தியாகி அந்த இராஜதானியிலும், ஐதராபாத்திலும் தென்கிழக்காகவும், ஐதராபாத்துக்கும் கர்நூல், கிருஷ்ணா இந்த ஜில்லாக்களுக்கும் மத்தியில் கிழக்காகவும், கடைசியாய் கிருஷ்ணா ஜில்லா வழியாகவும் பாய்ந்து கடலில் சங்கமமாகிறது. இதன் நீளம் 800 மைல். இதன் உபநதிகள் தென்கரையில் கர்நூல் பல்லாரி இந்த ஜில்லாக்களுக்கும் ஐதராபாத்துக்கும் மத்தியிலுள்ள துங்கபத்திரையும், வடகரையில் (1) பீமா, (2) குத்பர்பா, (3) மால்பர்பா, (4) மூஸி ஆகிய இவைகளாம்.



**பிநாகினி** என்ற வட பெண்ணையாறு மைசூர் இராஜ்யத்தில் நந்திதுர்க்கத்திற்குச் சமீபத்தில் உற்பத்தியாகி அந்த இராஜ்யத்திலும் அநந்தபுரம், கடப்பை, நெல்லூர் இந்த ஜில்லாக்களிலும் சென்று நெல்லூருக்குச் சமீபத்தில் வங்காளக் குடாக்கடலில் சங்கமமாகிறது. அதன் நீளம் 350 மைல். செய்யாறு, பாபாக்கினி, சித்திராவதி என்னும் ஆறுகள் அதன் சிறு உபநதிகள்.

**பாலாறு:**—மைசூர் இராஜ்யத்தில் நந்திதுர்க்கத்திற்குப் பக்கத்தில் உற்பத்தியாகி அந்த இராஜ்யத்திலும் வட ஆற்காடு, செங்கற்பட்டு இந்த ஜில்லாக்களிலும் சென்று, சதுரங்கப்பட்டணத்துக்குச் சமீபத்தில் வங்காளக்குடாக்கடலில் விழுகிறது. அதன் நீளம் 230 மைல். அதன் கரையிலுள்ள பட்டணங்கள் (1) வேலூர், (2) ஆற்காடு, (3) செங்கற்பட்டு.

**தென் பெண்ணையாறு:**—மைசூர் இராஜ்யத்தில் நந்திதுர்க்கத்திற்குச் சமீபத்தில் உற்பத்தியாகி அந்த இராஜ்யத்திலும் சேலம், தென்னாற்காடு இந்த ஜில்லாக்களிலும் பாய்ந்து கூடலூருக்குச் சமீபத்தில் சமுத்திரத்தில் விழுகிறது.

**காவேரிநதி:**—மேற்குத் தொடர்ச்சிமலையில் குடகு நாட்டில் தலைக்காவேரி என்கிற இடத்தில் உற்பத்தியாகி குடகு, மைசூர் இராஜ்யங்களில் தென்கிழக்காயும், கோயம்புத்தூருக்கும் சேலத்துக்கும் மத்தியில் தெற்காயும், திரிச்சிராப்பள்ளி தஞ்சாவூர் இந்த ஜில்லாக்களில் கிழக்காயும் ஓடி நாகப்பட்டணத்துக்குச் சமீபத்தில் வங்



காளக் குடாக்கடலில் சங்கமமாகிறது. மைசூர் இராஜ்யத்தில் சிவசமுத்திரம் என்னுமிடத்தில் இந்நதி சிங்காரமான ஆகாசகங்கையாய் விழுகிறது. திரிச்சிராப்பள்ளி ஜில்லாவிலுள்ள ஸ்ரீரங்கம் என்னும் தீவுக்குச் சமீபத்தில் இது இரண்டு கிளைகளாய்ப் பிரிந்து தஞ்சாவூர் ஜில்லா வழியாய்ச் செல்லுகிறது. வட கிளை நதிக்குக் கொள்ளிடம் என்று பெயர். தென்புறமுள்ளது காவேரி. இந்நதியின் கரையிலுள்ள முக்கிய பட்டணங்கள் ஸ்ரீரங்கப்பட்டணம், திரிச்சிராப்பள்ளி. இதன் நீளம் 475 மைல். இதன் உபநதிகள் மைசூர் இராஜ்யத்திலுள்ள (1) ஹேமாவதி, (2) இலக்ஷ்மணதீர்த்தம், (3) பவானி, (4) நொய்யல், (5) அமராவதி.

**ஏரிகள்:** — இந்தியாவில் ஏரிகள் மிகச் சொற்பம். அவைகள் சிறியவைகள்; விசேஷமானவைகளல்ல. ஒரிஸாநாட்டிலுள்ள சிலுகா ஏரி 44 மைல் நீளமுள்ளது. எவ்விடத்திலும் 5 அடிக்குமேல் ஆழமில்லை. மாரிகாலத்தில் நல்ல ஜலமாயும், மற்றக் காலங்களில் ஜலம் உப்பாயுமிருக்கும். கொல்லேரு ஏரியின் ஒருபாகம் கிருஷ்ணா ஜில்லாவிலும், மற்றொரு பாகம் கோதாவரி ஜில்லாவிலு மிருக்கிறது. அதன் நீளம் 25 மைல், அகலம் 10 மைல். அதிக ஆழமில்லை. பழவேற்காடு ஏரி நெல்லூர் ஜில்லாவிற்குத் தெற்கே 37 மைல் நீளமும் 3 மைல் முதல் 11 மைல் வரையில் அகலமுமுள்ளது. அது கடலுக்குச் சமீபமாயிருப்பதால் கடல் தண்ணீர் அதில் சம்பந்தப்பட்டு உப்பாயிருக்கிறது.

## 2-வது. அத்தியாயம்.

### சென்னை இராஜதானியின் பொதுவிவரம்.

**விஸ்தீரணம்:**—சென்னை இராஜதானியின் வடகிழக்குக் கோடிமுதல் தென்மேற்குக் கோடிவரையில் அதன்



நீளம் 950 மைல். அதிகமாய் அகன்றிருக்கிற இடத்தில் அதன் அகலம் 450 மைல்.

**இவ்விராஜதானியின் பிரிவுகள்:**—(1) அங்கிலேயர் ஆளுகைக்குட்பட்ட 22 ஜில்லாக்கள். (2) அங்கிலேய இராஜாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட காரியஸ்தருடைய ஆளுகைக்குள்ளான ஏஜென்ஸி டிராக்ட்ஸ் (Agency Tracts) என்று வழங்கும் கஞ்சம், விசாகப்பட்டணம், கோதாவரி இந்த ஜில்லாக்களின் சில பாகங்கள், (3) சுதேச ஆளுகைக்குட்பட்ட 5 இராஜ்யங்கள். மொத்த விஸ்தீரணம் 1,50,000 சதுரமைல். இவ்விராஜதானியின் கடற்கரையின் நீளம் மொத்தம் 1,750 மைல்.

**எல்லைகள்:**—வடக்கில் பம்பாய் இராஜதானி, ஐதராபாத்து, மத்தியமாகாணங்கள், வங்காளக் கீழ்மாகாணங்கள், மேற்கில் அரபிக்கடல், தெற்கில் இந்துசமுத்திரம். கிழக்கில் வங்காளக் குடாக்கடல்.

**இயற்கை அமைப்பு:**–இவ்விராஜதானியின் இயற்கை அமைப்பு முதல் அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**ஜனத்தொகை:**—1891–ம் வருஷத்திய ஜன சங்கியைப்படி 3,92,80,000. இதில் அங்கிலேயருக் குட்பட்ட 22 ஜில்லாக்களின் ஜனசங்கியை 343 லக்ஷம்; ஏஜென்ஸி டிராக்டிஸில் வசிப்பவர்களின் ஜனத்தொகை 12,80,000. ஆக அங்கிலேய இராஜ்யத்தின் மொத்த ஜனசங்கியை 3,55;80,000. சுதேச ராஜ்யங்கள் ஐந்திலும் வசிப்பவர்களின் தொகை சுமார் 37 லக்ஷம். இந்த மொத்தத்தில் இந்துக்கள் 100–ல் $91\frac{1}{2}$ பாகம், மகம்மதியர் 100–ல் 6 பாகம், கிறிஸ்தவர்கள் 100–ல் $2\frac{1}{4}$ பாகம். ஜயினர்களும், பவுத்தர்களும் மற்ற சமயத்தாரும் கூடி 100–ல் $\frac{1}{4}$ பாகம்.

**பாஷைகள்:**–இவ்விராஜதானியில் வழங்கும் பாஷைகள் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் என்கிற ஐந்து திராவிட பாஷைகளாம். திருவனந்தபுரம், கொச்சி, மலையாளம் முதலிய இடங்களில் மலை



யாள பாஷையும், தென்கன்னடம், மைசூர், பல்லாரியின் ஓர் பகுதி இவைகளில் கன்னடமும், தென்கன்னடத்தில் துளுவமும், சென்னப்பட்டணத்துக்கு வடக்கில் கடற்கரையை அடுத்த ஜில்லாக்கள், கடப்பை, கர்நூல், பல்லாரி, அனந்தபுரம் ஜில்லாக்கள் இவைகளில் தெலுங்கும், சென்னப்பட்டணத்திற்குத் தெற்கில் உள்ள ஜில்லாக்களில் தமிழ்ப் பாஷையும் வழங்குகின்றன. மகம்மதியருடைய பாஷை ஹிந்துஸ்தானி; இதைத் தக்னி என்றும் சொல்வதுண்டு. மேற்குக்கரையிலிருக்கும் மாப்பிள்ளை என்னும் மகம்மதியர்கள் மலையாளமும், கிழக்குக்கரையிலுள்ள லப்பைகள் தமிழும் பேசுகிறார்கள். கஞ்சம் ஜில்லாவின் வடபாகத்தில் ஒரியாபாஷை வழங்குகிறது.

**விளைபொருள்கள்:**—**அரிசி**, கோதாவரி, கிருஷ்ணா, தஞ்சாவூர் ஜில்லாக்களிலும், மேற்கில் திருவனந்தபுரம், கொச்சி, மலையாளம், தென்கன்னடம் முதலிய இடங்களிலும் விசேஷமாய் உண்டாகிறது. **சோளம்**, அனந்தபுரம், பல்லாரி, கர்நூல் ஜில்லாக்களிலும்; **கேழ்வரகு**, மைசூர், சேலம், கோயம்புத்தூர் ஜில்லாக்களிலும் பயிராகின்றன. கோதாவரி, கிருஷ்ணா நதிகளின் கரையோரங்களிலும், கோயம்புத்தூர், சேலம், கர்நூல், மதுரை ஜில்லாக்களிலும் புகையிலை பயிரிடப்படுகிறது. கோதாவரி, வட ஆற்காடு, தென் ஆற்காடு, திரிச்சிராப்பள்ளி, கோயம்புத்தூர், பல்லாரி, கடப்பை ஜில்லாக்களில் கரும்பும்; திருநெல்வேலி, கடப்பை, கர்நூல், பல்லாரி, அனந்தபுரம், கோயம்புத்தூர் ஜில்லாக்களில் பருத்தியும் விளைகின்றன. கிருஷ்ணா, கடப்பை, தென் ஆற்காடு, நெல்லூர், கர்நூல் ஜில்லாக்களில் அவுரியும்; மலையாளம், மைசூர், குடகு, திருவனந்தபுரம், நீலகிரி இவைகளில் காப்பிக்கொட்டையும் உற்பத்தியாகின்றன. தென்னமரம் மேற்குக் கடற்கரையோரமாய் விசேஷமாய் உண்டாகிறது. மேற்குத்தொடர்ச்சி மலைகளிலும் அதைச்சார்ந்த ஜில்லாக்களிலும் மிளகு,



ஏலக்காய், சம்பாரவர்க்கம், வெற்றிலை, பாக்குமுதலானவைகள் உண்டாகின்றன. தேயிலை நீலகிரியில் உற்பத்தியாகிறது.

**தாதுப்பொருள்கள்:**—முக்கியமாய் மைசூரில் பொன் விசேஷமாய் அகப்படுகிறது. இதன் சுரங்கங்களிலிருந்து அநேக கோடி ரூபாய் மதிப்புள்ள தங்கம் சென்ற பத்து வருஷத்துக்குள் வெட்டி யெடுத்திருக்கிறார்கள். இவ்விராஜதானியின் பல இடங்களிலும் முக்கியமாய் சேலம், தென் ஆற்காடு, மைசூர் இவைகளிலும் நல்ல இரும்பு அகப்படும். ஐதராபாத்தில் நிலக்கரி அகப்படும்.

**கைத்தொழில்கள்:**—இவைகள் விசேஷமுள்ளவைகளல்ல. ஏறக்குறைய எல்லா ஜில்லாக்களிலும் நெசவுத் தொழில் உண்டு. கோதாவரி, திரிச்சிராப்பள்ளி ஜில்லாக்களில் சிறந்த சுருட்டுகள் செய்து ஐரோப்பாவுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். திரிச்சிராப்பள்ளியில் சிறந்த ஆபரணங்களும், தஞ்சாவூரில் அலங்காரமான வெள்ளிச்சாமான்களும், விசாகப்பட்டணத்தில் தந்தத்தினலும் கொம்பினலும் பல விநோதப்பொருள்களும் செய்கிறார்கள். எவ்விடத்திலும் உப்பு, சாராயம், கள் இவை துரைத்தனத்தாராலாவது, அல்லது அவர்களிடம் அநுமதிபெற்ற குத்தகைக்காரர்களாலாவது உண்டாக்கப்படுகின்றன.

**ஏற்றுமதிச்சரக்குகள்:**—காப்பிக்கொட்டையும், பருத்தியும் முக்கிய ஏற்றுமதி; தோல், அரிசி, எண்ணெய், வித்துக்கள், நீலம், வாசனைத்திரவியம், எண்ணெய் முதலியவைகளும் ஏற்றுமதி செய்கிறார்கள். சர்க்கரை, கயிறு, தேங்காய், வெட்டுமரம், புகையிலை, துணி முதலியவைகளும் சிறு பான்மை ஏற்றுமதியாவதுண்டு.

**இறக்குமதிச் சரக்குகள்:**—பஞ்சு, பருத்திநூற் புடவைகள், உலோகங்கள், புகைவண்டிச் சாமான்கள் இன்னும் அநேக ஐரோப்பிய கைத்தொழிற் சரக்குகள் இறக்குமதியாகின்றன.



**துறைமுகங்கள்:**—கிழக்குக் கரையில், பீமன் பட்டணம், விசாகப்பட்டணம், காக்கினாடா, மசூலிப்பட்டணம், சென்னப்பட்டணம், புதுச்சேரி, நாகப்பட்டணம், தூத்துக்குடி. மேற்குக்கரையில் கொச்சி, கள்ளிக்கோட்டை, தலைச்சேரி, கண்ணனூர், மங்களூர்.

**சீதோஷ்ண ஸ்திதி:**—சென்னை இராஜதானியின் சமவெளிகளில் இந்தியாவின் மற்ற இடங்களைப்பார்க்கிலும் உஷ்ணம் மிகுதி. ஆனால் தக்ஷண பீடபூமியும் அதிலுள்ள மைசூர் இராஜ்யமும் குளிர்ச்சியாயிருக்கும். மார்ச்சு மாதம் முதல் செப்டெம்பர் மாதம் வரையில் அதிக உஷ்ணகாலம். மழைக்காலம் இரண்டு. ஜூன் முதல் செப்டெம்பர் வரையில் பெய்வது கோடைமழை (South-West Monsoon); அக்டோபர் நவம்பர் மாதங்களில் பெய்வது மாரிகாலமழை (North-East Monsoon). கிழக்குக்கரை நாடுகளைப்பார்க்கிலும் மேற்குக்கரை நாடுகளில் மழை அதிகம். பல்லாரி, கடப்பை, கர்நூல், அனந்தபுரம் ஜில்லாக்கள் அதிக மழையில்லாத வறட்சியானவை.

**இருப்புப்பாதை:**—இவ்விராஜதானியில் நான்கு இருப்புப் பாதைகளிருக்கின்றன. (1) சென்னை இருப்புப் பாதை, (2) தென் இந்தியா இருப்புப்பாதை, (3) தென் மஹாராஷ்டிர இருப்புப்பாதை, (4) கிழக்குக்கரை இருப்புப்பாதை. சென்னை இருப்புப்பாதை சென்னப்பட்டணத்தினின்று ஆரம்பித்து மேற்குமுகமாய் அரக்கோணம் வரையிற் சென்று அவ்விடத்தில் இரண்டு பெரிய கிளைகளாகப் பிரிகின்றது. இக்கிளைகளுள் ஒன்று வடமேற்காய் கடப்பை, அனந்தபூர், பல்லாரி ஜில்லாக்களின் வழியாய்ச் சென்று நிஜாம் ராஜ்யத்திலுள்ள ரெயிச்சூரில் ஜி. ஐ. பி. ஆர் (G. I. P. R.) என்னும் பெரிய இருப்புப் பாதையுடன் கலக்கின்றது. மற்றொன்று தென்மேற்காய் சேலம், கோயம்புத்தூர், மலையாளம் ஜில்லாக்களின் வழியாய்ச் சென்று மேற்கு சமுத்திரக்கரையிலுள்ள தலைச்சேரியில் முடிகிறது. இப்பெரிய கிளையிலுள்ள



ஜோலார்பேட்டை ஸ்டேஷனிலிருந்து ஒரு கிளை பெங்களூருக்குப் போய் அவ்விடத்தில் தென் மஹாராஷ்டிர இருப்புப் பாதையுடன் கலக்கிறது. வேறொரு கிளை போதனூரிலிருந்து நீலகிரியிலுள்ள கூனூர் வரையில் செல்லுகின்றது. மற்றொரு அதிக சிறிய கிளை வாலாஜா ரோட்டினின்று ராணிப்பேட்டைக்கும், வேறொன்று உலவகோட்டினின்று பாலக்காட்டுக்கும் போகின்றது. சோரனூர் ஸ்டேஷனிலிருந்து ஒரு பிரிவு தென்மேற்காய் கொச்சிக்குப் போகின்றது. தலைச்சேரியினின்று தென்கன்னடம் ஜில்லாவிலுள்ள மங்களூர் வரையில் இருப்புப்பாதை இப்பொழுது போடப்பட்டு வருகிறது. இவ்விருப்புப்பாதை முடிந்தபின்பு மேல் சமுத்திரக்கரை ஜில்லாக்களுக்கு போக்குவரவு மிகவும் சுலபமாயிருக்கும்.

தென் இந்தியா இருப்புப்பாதை சென்னப்பட்டணத்தினின்று ஆரம்பித்து தென்முகமாய் செங்கற்பட்டு, தென்னாற்காடு, திரிச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களின் வழியாய்ச் சென்று கரைதுறைப் பட்டணமாகிய தூத்துக்குடியில் முடிகிறது. இப்பெரிய பாதையிலுள்ள செங்கற்பட்டு ஸ்டேஷனிலிருந்து ஒரு சிறு கிளை காஞ்சீபுரம் வழியாய் அரக்கோணத்திற்குச் சென்று அங்கு சென்னை இருப்புப்பாதையுடன் கலக்கிறது. விழுப்புரத்திலிருந்து கிழக்கு திக்காய் ஒரு கிளை புதுச்சேரிக்குப் போகிறது. இவ்விழுப்புரத்தினின்றே வேறொரு கிளை வேலூர் வழியாய்ச் சென்று தென்மேற்காய் செல்லும் சென்னை இருப்புப்பாதையை காட்பாடியில் குறுக்கிட்டுக்கொண்டு, பாக்காலா, திருப்பதி இவைகளின் வழியாய் ரேணிகுண்டாவுக்குப் போய் அவ்விடத்தில் வடமேற்காய்ச் செல்லும் சென்னை இருப்புப் பாதையுடன் கலந்து, பின்பு வடக்குமுகமாய் போய் நெல்லூர் ஜில்லாவிலுள்ள கூடூரில் கிழக்குக்கரை இருப்புப்பாதையுடன் கலக்கிறது. இக்கிளையிலுள்ள பாக்காலாவினின்று ஒரு கிளை வடமேற்காய்ச் சென்று தர்



மாவரத்தில் தென் மஹாராஷ்டிர இருப்புப்பாதையைச் சந்திக்கிறது. மாயவரத்தினின்று ஒரு கிளை தெற்கு முகமாய் திருவாலூர் முத்துப்பேட்டை வழியாய் பட்டுக்கோட்டைக்குச் செல்லுகின்றது; தஞ்சாவூரினின்று ஒரு கிளை நேர்கிழக்காய் நாகூர் வரையில் போகின்றது. திரிச்சிராப்பள்ளியினின்று ஒரு கிளை மேற்கு முகமாய்ப் போய் ஈரோட்டில் சென்னை இருப்புப்பாதையுடன் கலக்கிறது. மணியாச்சியினின்று ஒரு கிளை திருநெல்வேலிவரையில் செல்லுகின்றது. மதுரையினின்று ஒரு பிரிவு இராமநாதபுரம் வழியாய் பாம்பனுக்குப் போகின்றது.

தென் மஹாராஷ்டிர இருப்புப்பாதை மார்மகோவாவிலிருந்து கிழக்கு முகமாய் ஹுப்ளிவழியாய் குண்டக்கல்லில் சென்னை வடமேற்கு இருப்புப்பாதையை குறுக்கிட்டுக்கொண்டு கர்நூல், கிருஷ்ணா ஜில்லாக்களின் மூலமாய் நெடுந்தூரம்போய் பெஜவாடாவில் கிழக்குக்கரை இருப்புப்பாதையிற் சேர்கின்றது. ஹுப்ளியினின்று வேறொருபாதை தென்கிழக்கு முகமாய்ச் சென்று பெங்களூரில் சென்னை இருப்புப்பாதையைச் சந்திக்கிறது. பெங்களூரினின்று ஒரு கிளை தென்மேற்கு முகமாய் மைசூர் வழியாய்ச் சென்று நஞ்சனகுடியில் முடிகின்றது. மற்றொரு கிளை பெங்களூரினின்று நேர்வடக்காய் தர்மாவரத்தின் வழியாய்ச் சென்று குந்தக்கல்லில் சென்னை இருப்புப்பாதையுடன் கலக்கின்றது.

கிழக்குக்கரை இருப்புப்பாதை சென்னையினின்று புறப்பட்டு கடற்கரையோரமாய் நேர்வடக்காய் செங்கற்பட்டு, நெல்லூர், கிருஷ்ணா, கோதாவரி, விசாகப்பட்டணம், கஞ்சம் ஜில்லாக்களுக்குப் போய் பின்பு வடகிழக்காய்த் திரும்பி கல்கத்தாவரையில் செல்கின்றது. இப்பாதை கீழ்கரையோரமா யிருக்கும் ஜில்லாக்கள் வழியாய்ப் போவதால் இதற்கு கிழக்குக்கரை இருப்புப்பாதையென பெயர் வழங்கிவருகின்றது. இவ்விருப்புப்பாதையுடன் தென் இந்தியா இருப்புப்பாதை கூடு



ரென்னுமிடத்திலும் தென் மஹாராஷ்டிர இருப்புப்பாதை பெஜவாடா என்னுமிடத்திலும் சந்திக்கின்றது.

**பிரிவுகள்:** — இந்தச் சென்னை இராஜதானியிலுள்ள 22 ஜில்லாக்களில், 11 கிழக்குக்கரையிலும், 2 மேற்குக் கரையிலும், 9 மத்தியிலு மிருக்கின்றன. கிழக்குக் கரையில் வடகோடிமுதல் தென்கோடி வரையிலுள்ள ஜில்லாக்களாவன:—கஞ்சம், விசாகப்பட்டணம், கோதாவரி, கிருஷ்ணா, நெல்லூர், சென்னப்பட்டணம், செங்கற்பட்டு, தென் ஆற்காடு, தஞ்சாவூர், மதுரை, திருநெல்வேலி. மேற்குக் கரையிலுள்ள ஜில்லாக்கள் தென் கன்னடமும் மலையாளமும். மத்தியிலுள்ள ஜில்லாக்களாவன:—மலைச்சாரலிலுள்ள பல்லாரி, அனந்தபுரம், கடப்பை, கர்நூல், நீலகிரி இவைகளும், சமபூமியிலுள்ள வடஆற்காடு, சேலம், கோயம்புத்தூர், திரிச்சிராப்பள்ளி இவைகளுமாம்.

இங்கிலீஷ்காரரால் ஆதரிக்கப்பட்டு வருகிற சமஸ்தானங்கள் ஐந்து. அவைகளாவன:—மேற்குக் கரையிலுள்ள (1) திருவனந்தபுரம்; (2) கொச்சி; தென்கிழக்கில் திரிச்சிராப்பள்ளிக்கும் மதுரைக்கும் மத்தியிலுள்ள (3) புதுகோட்டை; கர்நூலிலுள்ள (4) பங்கனபள்ளி, பல்லாரியிலுள்ள (5) சாந்தூர்.

## 3–வது. அத்தியாயம்,

### கஞ்சம் ஜில்லா.

**இருக்குமிடம்:** — கஞ்சம் ஜில்லாவானது சென்னை இராஜதானியின் வடகோடியில் கடற்கரை யோரத்தில் விசாகப்பட்டணத்துக்கும் ஒரிஸாவிற்கும் மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:** — இந்த ஜில்லாவின் மத்தியிலுள்ளவை கிழக்குத்தொடர்ச்சி மலைகள். நல்ல ஜலமுள்ள பல



ஏரிகள் கடலோரமாயிருக்கின்றன. இங்குள்ள மலைகளிலிருந்து ஓடி பல சிற்ருறுகள் கடலில் விழுகின்றன.

**மலை, ஆறு:**—இந்த ஜில்லாவின் மத்தியில் இருக்கிற கிழக்குத்தொடர்ச்சி மலைக்கு இவ்விடத்தில் **மலையமலை** யென்று பெயர். அதன் உயரம் சராசரி 3,000 அடி. முக்கியநதி **வம்சதாரை.** இது 145 மைல் தூரம் ஓடி களிங்கபட்டணத்துக் கருகில் கடலில் விழுகின்றது.

**சிலுகா ஏரி:**—இந்த ஜில்லாவின் வடகோடியிலிருக்கிறது. இந்த ஏரியின் வடபாகம் ஒரிஸாவிலும் பரவியிருக்கிறது.

**ஜனத்தோகை, பாஷை:**—ஜனத்தொகை மொத்தம் 18,90,000. இவர்கள் பெரும்பாலும் இந்துக்கள். இதர ஜனங்கள் மகம்மதியரும் கிறிஸ்தவர்களுமாம். இங்குள்ள இந்துக்களில் சிலர் ஒட்டிர பாஷையும், சிலர் தெலுங்கு பாஷையும் பேசுகிறார்கள். இந்த ஜில்லாவிலுள்ள பூர்வீக ஜாதியார் **கோதுகள்** என்பவர்கள்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—இந்த ஜில்லாவில் கிழக்குக்கரை இருப்புப்பாதை செல்லுகின்றது. 26 மைல் நீளமுள்ள கால்வாய் ஒன்று சமபூமியில் உண்டு. சென்னபட்டணத்திலிருந்து கல்கத்தாவுக்கு கரையோரமாகப் போகிற சாலை இந்த ஜில்லா வழியாய்ப் போகிறது.

**விவசாயம், வர்த்தகம்:**—தானியம் விளைகிற பூமியில் மூன்றிலிரண்டு பாகத்தில் நெல் பயிர் செய்யப்படுகிறது. சோளம், கேழ்வரகு, கோதுமை, கம்பு இவைகளும் பயிரிடப்படுகின்றன. அசிகா பட்டணத்துக்குச் சமீபத்தில் விஸ்தாரமாய்க் கரும்பு பயிர் செய்யப்படுகிறது. அப்பட்டணத்தில் சர்க்கரை செய்யும் யந்திரசாலை ஒன்று உண்டு.

**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லாவின் பிரதான பட்டணமாகிய **பரஹம்புரத்தில்** சர்க்கரை வியாபாரம் மிகுதி. ஸ்ரீ**காகுளம்** கடலிற்குச் சமீபத்திலிருக்கிறது. இங்கே உயர்ந்த மஸ்லின் நெய்யப்படுகிறது. இந்த ஜில்லாவில் பூர்வீகத்தில் பிரதான பட்டணமாயிருந்த **கஞ்சம்,** துறைமுகப்பட்டணமாயும் உப்பு செய்யப்படுமிடமாயுமிருக்கிறது. இதிலிருந்து முக்கியமாய் ஏற்றுமதி செய்யப்படுவது அரிசி. முக்கிய துறைமுகப்பட்டணமாகிய **கோபாலபுரம்** என்பது ஐரோப்பாவுடன் விசேஷமாய் வர்த்தகம் செய்யுமிடம். **அசிகா** என்னும் ஜமீனிலுள்ள முக்கிய பட்டணமாகிய **அசிகாவில்** ஐரோப்பியரால் நடத்தப்படும் சர்க்கரை யந்திரசாலை ஒன்றுண்டு. **களிங்கப்பட்டணம்,** வம்சதாரை நதி முகத்துவாரத்தில் ஸ்ரீகாகுளத்துக்கு வடக்கிலுள்ள துறைமுகப்பட்டணம். இது பூர்வத்தில் களிங்க இராஜ்யத்தின் இராஜதானியாயிருந்தது. இவ்விடத்தில் அதிக உப்பு விளைவிக்கப்படுகிறது.



## விசாகப்பட்டணம் ஜில்லா.

**இருக்குமிடம்:**—விசாகப்பட்டணம் ஜில்லா பரப்பிலும் ஜனத்தொகையிலும் சென்னை இராஜதானியிலுள்ள ஜில்லாக்களில் முதன்மையானது. இது கஞ்சம் கோதாவரி ஜில்லாக்களுக்கிடையிலிருக்கிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லாவானது கிழக்குத்தொடர்ச்சிமலையினால் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அம்மலைச்சார்பில் விஸ்தாரமான **ஜயபுரம்** ஜமீன் இருக்கிறது. அம்மலைக்கும் கடலுக்கும் மத்தியிலுள்ள சமவெளி மிகவும் செழிப்புள்ளது. அவ்விடத்தில் எங்கும் நெல்வயல்களும், கரும்புத் தோட்டங்களும், புகையிலைத் தோட்டங்களும் மிகுதி. கடலோரத்தில் குளிர்ச்சியாயும் உள்நாட்டிற் செல்லச் செல்ல அதிக உஷ்ணமாயும் வறட்சியாயுமிருக்கிறது. மலையின்மேல் குளிர் அதிகம். இந்த ஜில்லாவில் மழை கூடியமட்டில் ஏராளமென்று சொல்லலாம்.

**மலை, ஆறு:** — கிழக்குத் தொடர்ச்சிமலை இங்கே 5,000 அடி வரையில் உயர்ந்திருக்கிறது. இதின் ஒரு பாகத்திற்கு **பாலகோண்டா** என்றும், மற்றொரு பாகத்திற்கு **கோலகோண்டா** என்றும் பெயர். கஞ்சம் ஜில்லாவிலுள்ள ஸ்ரீகாகுளத்துக்குச் சமீபத்தில் கடலில் சங்கமமாகின்ற **நாகாவளி** முக்கியநதி.

**ஜனத்தோகை, பாஷை:** — இந்த ஜில்லா அதிக குடிவளமுள்ளது. ஜனத்தொகை 28,00,000. மொத்த ஜனத்தொகையில் சற்றுக்குறைய மற்றெல்லாரும் இந்துக்கள். ஜயபுரம் மலைநாட்டிலும் மலைச்சாரலிலும் காட்டு மனிதர்கள் விசேஷமாய்ச் சஞ்சரிக்கிறார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் **கோது** ஜாதியார்கள்; இவர்கள் முற்காலத்தில் நரபலி கொடுத்துவந்த வழக்கத்தை இங்கிலீஷ் துரைத்தனத்தார்கள் நிறுத்திவிட்டார்கள். ஒட்டிரபாஷை பேசுகிற சில இடங்கள் தவிர மற்றெங்கும் தெலுங்கு பாஷை வழங்குகிறது.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:** — இந்த ஜில்லாவில் கிழக்குக்கரை இருப்புப்பாதை கடற்கரையோரமாய் இருக்கிறது. சென்னபட்டணத்திலிருந்து கல்கத்தாவுக்குப் போகிறசாலை இந்த ஜில்லாவழியாய்ச் செல்லுகிறது. சமவெளியிலுள்ள முக்கியமான பட்டணங்களுக்குப் போகவர நல்ல சாலைகள் உண்டு.

**விவசாயம், வர்த்தகம்:** — முக்கியமான நன்செய்ப் பயிர்கள் நெல்லும் கரும்புமாம். புன்செய்ப்பயிர்கள் அவுரி, பருத்தி, கேழ்வரகு, எள்ளு. விசாகப்பட்டணத்தில் நடக்கிற கைத்தொழில்கள் தவிர வேறு சொல்லக்கூடியவை ஒன்றுமில்லை. அவைகள் ஒருவிதமான முரட்டுத்துணியும், தந்தத்தால் செய்யப்பட்ட சிறு பெட்டிகள் முதலியவைகளும், வெள்ளியினால் செய்யப்பட்ட சிங்காரமான வேலைகளுமாம்.

**முக்கிய பட்டணங்கள்:** — இந்த ஜில்லாவின் முக்கிய பட்டணம் கடற்கரையிலுள்ள **விசாகப்பட்டணம்**; அதில் ஒருவிதமான முரட்டுவஸ்திரமும், தந்தம், சந்தனமரம்,





THE SEASHORE, VIZAGAPATAM.—விசாகப்பட்டணத்தின் கடற்கரை.



வெள்ளி இவைகளால் பற்பல சாமான்களும் செய்யப் படுகின்றன. இதற்கு 3 மைல் வடக்கேயுள்ள **வால்தேர்** என்னும் பட்டணத்தில் ஐரோப்பிய உத்தியோகஸ்தரும் இராணுவ அதிகாரிகளும் வசிக்கிறார்கள். இதற்கு வடக்கேயுள்ள **பீமன்பட்டணம்** இந்த ஜில்லாவின் முக்கியமான துறைமுகப்பட்டணம். இந்தியாவிலுள்ள பெரிய ஜமீன்களில் ஒன்றாகிய 3,000 சதுரமைல் உள்ள விஜயநகரம் ஜமீனில் முக்கியபட்டணம் **விஜயநகரம்**. அது அந்த ஜமீனின் தலைவராகிய மகாராஜா வசிக்குமிடம். அவ்விடத்தில் அநேக நல்ல ரஸ்தாக்களும் பாடசாலைகளும் வைத்தியசாலைகளும் உண்டு. பொப்பிலி ஜமீனின் முக்கியபட்டணம் **பொப்பிலி**. 9,400 சதுரமைல் உள்ள ஜயபுரம் ஜமீனில் **ஜயபுரம்** என்பது ஒரு சிறிய பட்டணம்.

## கோதாவரி ஜில்லா.

**இருக்குமிடம்:**— இந்த ஜில்லா விசாகப்பட்டணம் கிருஷ்ணா ஜில்லாக்களுக்கு மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:—கோதாவரி** நதி இந்த ஜில்லாவின் மத்தியிற் செல்வதினால் இந்த ஜில்லாவுக்கு அப்பெயர் வழங்குகிறது. கடற்கரையோரத்திலுள்ள பூமியானது தாழ்ந்தும் சமமாயுமிருக்கிறது. எங்கும் நெல்வயல்களும் அவற்றின் நடுவில் தென்னஞ்சோலைகளும், பனங்காடுகளும், பாக்குச் சோலைகளும் விஸ்தாரமாயுண்டு; இந்த ஜில்லாவின் வடமேற்குப் பிரதேசம் மலையடர்ந்துள்ளது. இந்த ஜில்லாவில் மழை அதிகம்.

**மலை, ஆறு:**— இந்த ஜில்லாவின் மேற்கெல்லையாகிற கிழக்குத்தொடர்ச்சி மலைக்கு இவ்விடத்தில் **பாபி கோண்டா** என்று பெயர் வழங்குகின்றது. அம்மலையின் உயரம் 3,000 அடி. அதிலெங்கும் உன்னதமான தேக்குமாமடர்ந்த காடுகள் இருக்கின்றன. இம்மலைக்கு மத்தியிலுள்ள கணவாய் வழியாக கோதாவரி




COCANADA.—காக்கிநாடா.



யாறு ஓடி சமவெளியில் பாய்கிறது. **தவளேசுவரம்** என்கிற இடத்தில் இந்த ஆறு இரண்டு கிளையாய்ப் பிரிகிறது. இதற்கு அருகில் ஆற்றின் குறுக்காய் ஒரு பெரிய அணை கட்டப்பட்டிருக்கின்றது. மாரிகாலத்தில் வருகிற பிரவாகத்தை இந்த அணையினால் தடுத்து பயிர்களுக்குப் பாய்ச்சுவதற்காகப் பல கால்வாய்கள் வழியாய்த் திருப்பிவிடுகிறார்கள். கோதாவரி ஆற்றுக்கு ஏழு முகத்துவாரங்களுண்டு. இந்த முகத்துவாரங்களின் மத்தியில் உள்ள **இலங்கை** என்னும் தீவுகளில் புகையிலை விசேஷமாய்ப் பயிரிடுகிறார்கள். இந்த ஜில்லாவின் தென்மேற்கில் **கோல்லேரு** என்னும் ஒரு பெரிய ஏரி இருக்கிறது.

**ஜனத்தோகை, பாஷை:**—ஜமீன்களிலுள்ள ஜனங்களையும் சேர்த்து இந்த ஜில்லாவின் ஜனத்தொகை மொத்தம் 20,00,000 க்கு கொஞ்சம் அதிகம். இந்தத் தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள். இவ்விடத்தில் வழங்குகிற பாஷை தெலுங்கு.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—கடற்கரையோரமாய் கிழக்குக்கரை இருப்புப்பாதை இருக்கிறது. நல்ல சாலைகள் நதிகள் முதலிய போக்குவரவுக்குரிய சாதனங்கள் இருக்கின்றன.

**விவசாயம், வர்த்தகம்:** — முக்கியமான நன்செய்ப் பயிராகிய நெல் தவிர சோளம், கேழ்வரகு, கொள்ளு இவைகளும் விசேஷமாய்ப் பயிரிடப்படுகின்றன. பருத்தி, புகையிலை, கரும்பு, அவுரி, ஆமணக்கு முதலியவைகளையும் சொற்பமாய்ப் பயிரிடுகிறார்கள். கைத்தொழிற் பண்டங்களில் முக்கியமானவை சமுக்காளம், கம்பளம், சர்க்கரை, நீலம். **காக்கினாடா, கோரங்கி, நரசாபுரம்** இவை முக்கியமான துறைமுகப்பட்டணங்கள்.

**முக்கிய பட்டணங்கள்:** —இந்த ஜில்லாவின் பிரதான பட்டணமாகிய **காக்கினாடா**, ஏராளமாய் வர்த்தகம் நடக்கும் விசேஷத் துறைமுகப்பட்டணம்; அங்கேயிருந்து பருத்தி அதிகமாய் ஏற்றுமதியாகிறது. கோதாவரி நதியின் முகத்துவாரத்திலுள்ள துறைமுகப்பட்டணமாகிய **கோரங்கி** முற்காலத்தில் கிழக்குக்கரையில் மிகவும் சிறந்த பட்டணமாக இருந்தது. டிஸ்திரிக்ட்டு ஜட்ஜி, சப்கலெக்டர் இவர்களின் வாசஸ்தலமாகிய **இராஜமஹேந்திரவரம்** கடற்கரையிலிருந்து 30 மைல் தூரத்தில் கோதாவரி நதியோரத்திலிருக்கிறது. இதில் ஒரு பெரிய கவர்ன்மெண்டு **காலேஜ்** இருக்கிறது. வட சர்க்கார் நாட்டின் முற்காலத்து இராஜதானியாகிய **ஏலூர்** ஹெட்அசிஸ்டாண்டு கலெக்டர் வசிக்கும் முக்கியமான பட்டணம். இராஜமஹேந்திரவரத்துக்குத் தெற்கே கோதாவரி ஆற்றங்கரையிலுள்ள **தவளேசுவரத்து**க்கருகில் கோதாவரி ஆற்றில் ஒரு அணை கட்டப்பட்டிருக்கிறது. **ஏனாம்** என்பது பிரான்சுக்காரருக்குச் சொந்தமான ஒரு சிறிய பட்டணம். அது கோதாவரி ஆற்றிற்கு அருகே யிருக்கிறது.



## கிருஷ்ணா ஜில்லா.

**இருக்குமிடம்:**—இந்த ஜில்லா கடற்கரையில் கோதாவரி, நெல்லூர் ஜில்லாக்களுக்கு மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லா பெரும்பாலும் சமபூமியாயிருக்கிறது. **கிருஷ்ணாநதி** இந்த ஜில்லாவை இரண்டு பாகமாய்ப் பிரிக்கிறது. வடக்கேயுள்ளதற்கு மசூலிப்பட்டணம் டிவிஷன் என்றும், தெற்கே உள்ளதற்கு குண்டூர் டிவிஷன் என்றும் பெயர். கிருஷ்ணா ஜில்லாவில் ஒரு பாகமும்; கோதாவரி ஜில்லாவில் ஒரு பாகமுமாயிருக்கிற **கோல்லேரு** என்னும் ஏரி வடகோடியிலிருக்கிறது. இவ்விடத்தில் வருஷந்தோறும் அதிக மழை பெய்கிறது.

**மலை, ஆறு:**—கிழக்கு மலைத்தொடர் இந்த ஜில்லாவில் சிறு குன்றுகளாகத் தாழ்ந்திருக்கிறது. இங்குள்ள ஆறுகள் **கிருஷ்ணா**வும் **கண்டிகாமா**வுமாம். **பெஜவாடா**



என்னுமிடத்தில் கிருஷ்ணாநதியில் ஒரு பெரிய அணை கட்டப்பட்டு அந்த நதியின் பிரவாகம் அதன் இரு புறத்திலுமுள்ள கால்வாய்களில் திருப்பிவிடப்பட்டிருக்கிறது. இக்கால்வாய்களில் ஓடும் ஜலத்தை சிறு கால்வாய்கள் வழியாய்ச் சாகுபடிக்கு உபயோகப்படுத்துகிறார்கள். கர்நூலில் உற்பத்தியாகிவரும் கண்டிகாமா இந்த ஜில்லாவின் தென்பாகத்தில் ஓடி நெல்லூர் ஜில்லாவுக்குப் போகிறது.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 18,50,000. இந்தத் தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள், மற்றவர்கள் மகம்மதியர்களும், கிறிஸ்தவர்களுமாம். இவ்விடத்தில் வழங்கும் பாஷை தெலுங்கு.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—நிஜாம் இராஜ்ய இருப்புப்பாதை பெஜவாடாவிலிருந்து ஐதராபாத்துக்கு வடமேற்காய்ச் செல்லுகிறது. பெஜவாடாவிலிருந்து கர்நூல்ஜில்லா வழியாக வேறொரு இருப்புப்பாதை குண்டக்கல் ஜங்ஷனுக்குச் சென்று அங்கிருந்து மேற்குக்கரையிலுள்ள மார்மகோவாவுக்குப் போகிறது. சென்னப்பட்டணத்தினின்று கல்கத்தாவுக்குப் போகும் கிழக்குக்கரை இருப்புப்பாதை இச்சில்லாவின் மூலமாய்ச் செல்லுகின்றது. விசேஷமாய்க் கால்வாய்ப் போக்குவரவுண்டு. பெஜவாடாவிலிருந்து கிருஷ்ணாநதியின் ஒரு கால்வாய் வடதிசையாய் ஏலூருக்கும், மசூலிப்பட்டணத்துக்கும் போகிறது. மற்றொரு கால்வாய் தென்திசையாய்க் கடலோரமாய்ச் சென்னப்பட்டணத்துக்குச் செல்லுகிறது.

**விவசாயம். வர்த்தகம்:**—பிரதான விளைபொருள்கள் நெல், சோளம், கேழ்வரகு, பயறுகள், சணல், பருத்தி, புகையிலை, ஆமணக்கு, எள்ளு, அவுரி. வேளாண்மையே ஜனங்களுடைய முக்கியமான தொழில்; நெசவுத்தொழிலும் விசேஷமாய் நடக்கிறது. பெஜவாடாவில் தோல் வியாபாரம் அதிகம்.





BEZWADA ANICUT.—பெஜவாடா அணைக்கட்டு.



**முக்கிய பட்டணங்கள்:**—பந்தர் என்று சொல்லப்படும் **மசூலிப்பட்டணம்** கலெக்டர் வசிக்கும் முக்கிய பட்டணம். இது இந்த ஜில்லாவில் முக்கிய துறைமுகப்பட்டணம். இது இங்கிலீஷ்காரருடைய ஆதிஸ்தலங்களில் ஒன்று. 1864–ம் வருஷத்தில் புசலடித்து இந்தப் பட்டணத்தில் பெரும்பாகத்தை அழித்துவிட்டது. இவ்விடத்தில் பந்தர்சீட்டி என்று ஒருவகை வஸ்திரம் நெய்யப்படுகிறது. குண்டூர் ஜில்லாவில் இதற்கு முன் பிரதான பட்டணமாய் வழங்கிய **குண்டூர்** இப்பொழுது சப்கலெக்டர் டிவிஷனில் தலைமைப்பட்டணமாக விருக்கிறது. இங்கே அநேக பஞ்சுயந்திரச்சாலைகளிருக்கின்றன; தானியங்களும் பருத்தியும் விசேஷமாய் விற்பனையாகும். இந்த ஜில்லாவில் வர்த்தகத்துக்கு மத்திய ஸ்தானமாகிய **பெஜவாடா**, கிருஷ்ணநதியோரத்திலிருக்கிறது. மேற்குக்கரையிலுள்ள மார்மகோவாவிலிருந்து குண்டக்கல் வழியாய் வருகிற இருப்புப்பாதையும், ஐதராபாத்திலிருந்து வருகிற இருப்புப்பாதையும் இவ்விடத்தில் முடிகின்றன. இவ்விடத்திலிருந்து தெற்கே சென்னப்பட்டணத்துக்கும், வடக்கே மசூலிப்பட்டணம், காக்கினடா, ராஜமஹேந்திரவரம் இவைகளுக்கும் கால்வாய்ப் போக்குவரவு ஏற்பட்டிருக்கிறது. கிருஷ்ணநதியில் கட்டப்பட்ட பெரிய அணையால் ஒரு சிறிய கிராமமாயிருந்த பெஜவாடா மிகவும் பெரிய பட்டணமாயிற்று.

## நெல்லூர் ஜில்லா.

**இருக்குமிடம்:**—இது கிருஷ்ண செங்கற்பட்டு ஜில்லாக்களுக்கு மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லா கிழக்கு மலைத்தொடருக்கும் கடலுக்கும் மத்தியிலுள்ள சமபூமி. இந்த ஜில்லாவில் நிலவளம் பெரும்பாலும் குறைவு. மேற்குப்புறத்தில் **வெலிகோண்டா** என்னும் குன்றுகள் தொடர்ச்சி





TEMPLE, ONGOLE.—ஒங்கோல் கோவில்.



யாய் இருக்கின்றன. தெற்கில் **பழவேற்காட்டு ஏரி** இருக்கிறது. இந்த ஜில்லா வறட்சியுள்ளதாயும் கூடியமட்டில் தேக சௌக்கியமுள்ளதாயு மிருக்கிறது. இவ்விடத்தில் வேண்டிய அளவு மழைபெய்கிறது.

**மலை, ஆறு:** — இந்த ஜில்லாவின் மேற்குப்புறத்தில் கிழக்குத்தொடர்ச்சிமலை யிருக்கிறது. இதற்கு இவ்விடத்தில் **வெலிகோண்டாமலை** என்று பேர். அது 2,000 முதல் 3,000 அடிவரையில் உயர்ந்திருக்கிறது. அதன் உயர்ந்த சிகரம் **உதயகிரி**. இந்த ஜில்லாவின் முக்கியமான நதி **பெண்ணையாறு**. நெல்லூரின் சமீபத்தில் இந்நதியில் ஒரு அணை கட்டப்பட்டு அதிலிருந்து சாகுபடி செய்யும்பொருட்டு கால்வாய்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. இந்த ஜில்லாவின் வடபாகத்தில் **கண்டிகாமா** என்னும் நதியோடுகிறது.

**ஜனத்தொகை, பாஷை:** — இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 14,60,000. இத்தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள்; மற்றவர்கள் மகம்மதியர்களும், சொற்ப கிறிஸ்தவர்களுமாம். **ஸ்ரீஹரிக்கோட்டை** என்னும் தீவில் **ஏனாதிகள்** என்னும் ஓர் நாகரீகமற்ற ஜாதியார் வசிக்கிறார்கள். இவர்கள் பேசும்பாஷை தெலுங்கு. இப்பாஷையே இச்சில்லா முழுவதும் வழங்குவது.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:** — சென்னப்பட்டணத்தினின்று கல்கத்தாவுக்குப் போகும் கிழக்குக் கரை இருப்புப்பாதை இச்சில்லாவின் மூலமாய்ச் செல்லுகின்றது. விழுப்புரத்தினின்று வடமேற்காய்ச் செல்லும் தென் இந்தியா இருப்புப்பாதை இச்சில்லாவில் கூடூர்வரையில் சென்று அவ்விடத்தில் கிழக்குக்கரை இருப்புப் பாதையைச் சந்திக்கிறது. பக்கிங்காம் கால்வாய் கடற்கரை யோரமாகச் சென்று தெற்கில் சென்னப்பட்டணத்துக்கும், வடக்கில் கிருஷ்ணாவுக்கும் போக்குவரவுக்குச் சாதனமாயிருக்கிறது.

**விவசாயம், வர்த்தகம்:** — இச்சில்லாவின் பிரதான விளைபொருள்கள் சோளமும், நெல்லும், அவுரியும்,



பருத்தியும் அதிகமாகப் பயிராகின்றன. உயர்ந்த ஜாதி எருதுகளுக்கு இந்த ஜில்லா பெயர்பெற்றிருப்பதால் அவைகள் மற்ற ஜில்லாக்களுக்கு அதிகமாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. மிகுதியாக நீலம் செய்து சென்னைக்குப் படகில் அனுப்புகிறார்கள்.

**முக்கிய பட்டணங்கள்:** — பெண்ணையாற்றின் கரையிலுள்ள புராதன பட்டணமாகிய **நெல்லூர்** இந்த ஜில்லாவின் கலெக்டர் வசிக்கும் தலைமைப்பட்டணம். **வங்கவோல்** இந்த ஜில்லாவின் வடபாகத்திலுள்ள பிரதான பட்டணம். அது சப்கலெக்டர் வசிக்குமிடம்.

## சென்னப்பட்டணம் ஜில்லா.

**இருக்குமிடம், பரப்பு:**—இந்த இராஜதானியின் பிரதான நகரமாகிய சென்னப்பட்டணம் கடலோரமாய் 9 மைல் நீளமும் உள்நாட்டில் $3\frac{1}{2}$ மைல் அகலமும் உள்ளது. அதன் பரப்பு 27 சதுரமைல். கிழக்கே கடலும் மற்றப் பக்கங்களில் செங்கற்பட்டு ஜில்லாவும் இதைச் சூழ்ந்திருக்கின்றன. இப்பொழுது சென்னப்பட்டணம் இருக்கிற இடம் இங்கிலீஷ்காரருக்கு 1639 – ம் வருஷம் சந்திரகிரி ராஜாவினிடமிருந்து கிடைத்தது.

**வரலாறு:**–**ஸெண்டு ஜார்ஜ்–கோட்டை** இந்நகரத்தின் மத்தியென்னலாம். அதில் இராணுவ ஆபீசுகளிருக்கின்றன. இதற்கு வடக்கில் அதிக ஜனநெருக்கமுள்ள பட்டணமென்று வழங்குகிற **பிளாக்டவுன்** இருக்கிறது. அதில் பாங்கு ஆபீசுகள் (Bank Offices), ஹைகோர்ட்டு, வர்த்தகசாலைகள், கடல் தீர்வை வாங்கும் ஆபீசாகிய கஸ்டம் ஹவுஸ், அநேக ஷாப்புகள், கடைத்தெருக்கள் இவையிருக்கின்றன. கடலில் இரும்புவாராவதியும் (Pier), கப்பல் ஒதுங்கும் இடமும் கட்டப்பட்டிருக்கின்றன. இந்நகரத்தைச் சேர்ந்த ஊர்களில் ஐரோப்பியர்கள் பெரிய தோட்டங்கள் சூழ்ந்துள்ள



விசாலமான வீடுகளில் வசிக்கிறார்கள். இந்நகரத்தில் **கூவம், அடையாறு** என்னும் இரண்டு சிற்றாறுகள் ஓடுகின்றன. இவ்விரண்டிலும் உஷ்ணகாலத்தில் ஜலம் கிடையாது. இந்நகரத்தின் வடமேற்கிலுள்ள **புழலே** ரியிலிருந்து, ஏழுமைல் நீளமுள்ள கால்வாய் வழியாக நல்லஜலம் கொண்டுவரப்பட்டு எங்கும் சமர்த்தியாயிருக்கிறது. இது மதுராஸ் துரைத்தனத்தாரும், மதுராஸ் இராணுவ உத்தியோகஸ்தர்களும் இருக்கும் தலைமை நகரமாயிருப்பதால் சகல உத்தியோகசாலைகளும் இங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த உத்தியோகசாலைகளின் ஐரோப்பியத் தலைவர்கள், உஷ்ணகாலத்தில் குளிர்ச்சிக்காக உதகமண்டலத்துக்குப் போவது வழக்கம். சென்னப்பட்டணமானது உஷ்ணபூமியாக விருந்தபோதிலும் பொதுவாய்த் தேகத்துக்குச் சௌக்கியமுள்ளது. மாரிகாலமாகிய அக்டோபர், நவம்பர் மாதங்களில் மழை மிகுதியாய்ப் பெய்யும்.

**ஜனத்தொகை, பாஷை:**—இப்பட்டணத்தின் ஜனத்தொகை, 4,50,000. இத்தொகையில் 100ல் 78 பங்கு இந்துக்கள், 100ல் 12 பங்கு மகம்மதியர், 100ல் 10 பங்கு கிறிஸ்தவர். இவ்விடத்தில் பேசப்படும் பிரதான பாஷை தமிழ். ஜனங்களில் பாதிக்கு அதிகம் தமிழும், காற்பங்கு ஜனங்கள் தெலுங்கும் பேசுகிறார்கள். இந்துஸ்தானியும் இங்கிலீஷும் பேசப்படுகின்றன.

**வர்த்தகம்:**—ஏற்றுமதி இறக்குமதிச் சரக்குகளின் விலைமதிப்பால் இந்தியாவின் துறைமுகப் பட்டணங்களில் சென்னப்பட்டணத்தை மூன்றாவதாகச் சொல்லலாம். உலகத்திலுள்ள எல்லாத் தேசங்களுடனும் இங்கிருந்து வியாபாரம் நடக்கிறது. ஏற்றுமதிச் சரக்குகள்:—காப்பிக்கொட்டை, பருத்தி, தானியம், தோல், நிலம், எள்ளு, ஆமணக்கு, சாயவேர், சர்க்கரை, கொம்பு. இறக்குமதிச் சரக்குகள்:—பலவித வஸ்திரங்கள், இரும்புமுதலிய உலோக வகைகள், ஐரோப்பா





MADRAS.—சென்னப்பட்டணம்.



வில் செய்யப்படும் நானாவித சாமான்கள். ஒரு நேர்த்தியான கப்பல் ஒதுங்குமிடம் கட்டப்பட்டிருக்கிறது.

**போக்கு வரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னப்பட்டணத்திலிருந்து தலைச்சேரிக்கும், பம்பாய்க்கும் இருப்புப்பாதைகள் போடப்பட்டிருக்கின்றன. தென் ஜில்லாக்களுக்கும் வடஜில்லாக்களுக்கும் போக இருப்புப்பாதைகளுண்டு. பக்கிங்காம் கனால் என்கிற கால்வாய் தெற்கே தென்னாற்காட்டுக்கும், வடக்கே நெல்லூருக்கும் போகச் சாதனமாயிருக்கிறது. நெல்லூரிலிருந்து கிருஷ்ணாவுக்கும் கோதாவரிக்கும் போக வேறொரு கால்வாய் உண்டு. இக்கால்வாய்களின் நீளம் மொத்தம் 253 மைல்.

## செங்கற்பட்டு ஜில்லா.

**இருக்குமிடம்:** —செங்கற்பட்டு, நெல்லூர் தென்னாற்காடு ஜில்லாக்களுக்கு மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லா பெரும்பாலும் சமபூமியாய் இருக்கிறது. இந்த ஜில்லாவில் அதிகபாகம் மணற்பாங்காகவாவது, கற்பாங்காகவாவது, புல் அற்பமாய் முளைத்த சமவெளியாகவாவது இருக்கிறது. இந்த ஜில்லாவானது உஷ்ணமுள்ளதா யிருந்தபோதிலும் தேக சௌக்கியமுள்ளது.

**மலை, ஆறு:** — இச்சில்லாவின் வடமேற்கில் **காம்பாக்கம்** என்னும் மலையிருக்கிறது. அதன் உன்னதமான சிகரம் 2,500 அடி. இங்குள்ள பல சிற்றாறுகளில் முக்கியமானவை **பாலாறு, அடையாறு, கூவம்;** இவைகள் கோடைகாலத்தில் வறண்டுபோகின்றன. இவ்விடத்திலுள்ள உப்புநீர் ஏரி **பழவேற்காடு.** இந்த ஜில்லாவிலுள்ள **புழலேரி**யிலிருந்துதான் சென்னப்பட்டணத்துக்கு நல்ல ஜலம் வருகிறது.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 11,37,000. இச்சனத்தொகையில் பெரும்





CONJEVERAM.—காஞ்சீபுரம்.





பான்மையோர் இந்துக்கள். இங்கு வழங்கும் பாஷை தமிழ்; பலர் தெலுங்கும் பேசுகிறார்கள்.

**விவசாயம், வர்த்தகம்:** — இங்கு நிலவளம் மிகவும் குறைவு. தகுந்த எருக்கள் உபயோகப்படுத்தப்படாததினால் சரியான சாகுபடி இல்லை. முக்கியமான நன்செய்ப்பயிர் நெல்; புன்செய்ப்பயிர்கள் கேழ்வரகு, வரகு, சோளம், கம்பு, அவுரி, பயறுகள், எள்ளு, ஆமணக்கு, மிளகாய். உப்பும் விசேஷமாய் விளைவிக்கப்படுகிறது. இங்குள்ள ஜனங்களில் சிலர் நெசவுத் தொழில் செய்கிறார்கள்.

**போக்கு வரவுக்குரிய, சாதனங்கள்:**—தென்னிந்தியா இருப்புப்பாதை இங்கிருந்து தென்னாற்காட்டுக்கும், அதன் கிளையாகிய மற்றொன்று செங்கற்பட்டிலிருந்து காஞ்சீபுரத்தின் வழியாக வடஆற்காடு ஜில்லாவிலுள்ள அரக்கோணத்திற்கும் போகின்றது. சென்னப்பட்டணத்திலிருந்து, கள்ளிக்கோட்டைக்குப் போகிற இருப்புப்பாதை மேற்றிசையாய்ப் போகிறது. பக்கிங்காம் கனால் என்னும் ஒரு கால்வாய் உண்டு. இந்தக் கால்வாய் இந்த இராஜதானியின் கவர்னராயிருந்த பக்கிங்காம் பிரபு காலத்தில் வெட்டப்பட்டதனால், இதற்கு இப்பெயர் வழங்குகிறது.

**முக்கிய பட்டணங்கள்:** — முன்சொல்லிய இருப்புப்பாதையோரமாயுள்ள **காஞ்சீபுரத்தை**, இந்தியாவிலுள்ள ஏழு புண்ணியஸ்தலங்களில் ஒன்றாக இந்துக்கள் கொண்டாடுகிறார்கள். தென்காசியென்று வழங்குகிற இப்பட்டணத்தில் அநேக தேவாலயங்கள் உண்டு; அவற்றுள் இரண்டிற்கு வருஷத்திற்கொருமுறை நடக்கும் சிறந்த திருநாளுக்கு அநேக ஜனங்கள் கூடுவார்கள். இவ்வூர் முன் காலத்தில் சோழநாட்டின் இராஜதானியாக விருந்தது. சென்னப்பட்டணத்துக்கு அருகிலுள்ள **சைதாப்பேட்டை** இந்த ஜில்லாவின் முக்கியபட்டணம். **செங்கற்பட்டு** இதற்கு இரண்டாவது.. இதில் ஜில்லா ஜட்ஜி வசிக்கிறார்.



## வடஆற்காடு ஜில்லா.

**இருக்குமிடம்:**—மேற்கே மைசூர் இராஜ்யத்திற்கும், கிழக்கே செங்கற்பட்டு ஜில்லாவிற்கும் மத்தியிலிருக்கிற இந்த ஜில்லா உள்நாட்டது.

**தோற்றம்:**—கிழக்கு மலைத்தொடர்ச்சி இந்த ஜில்லாவில் தென்மேற்கிலிருந்து வடகிழக்காய் இருக்கிறது. இந்த ஜில்லாவின் மேற்குப்பாகம் அம்மலைச் சாரலிலிருக்கிறது. கீழ்த்திசையி லிருக்கிற தாழ்ந்தபூமி சமமான கட்டாந்தரை. இந்த ஜில்லா உஷ்ணமாயும் அசௌக்கியமாயுமிருக்கிறது. இரும்பும், தாமிரமும் பலவிடங்களில் விசேஷமாய் அகப்படுகின்றன.

**மலை, ஆறு:** — இந்த ஜில்லாவில் வடகிழக்கில் **நகரி மலை**யிருக்கிறது; அதன் உயரம் 2,000 அடி. தென்மேற்கில் 3,000 அடி உயரமுள்ள **ஜவ்வாதுமலை** வடஆற்காட்டுக்கும் சேலத்துக்கும் எல்லையாக விருக்கிறது. முக்கியநதி **பாலாறு**; இது மைசூரில் உற்பத்தியாகி இந்த ஜில்லாவின் வழியாக கீழ்த்திசை நோக்கிச் செங்கற்பட்டுக்குப் போகிறது.

**ஜனத்தோகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 21,80,000. இத்தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள்; மற்றவர்கள் மகம்மதியர்களும் சொற்ப கிறிஸ்தவர்களுமாம். மகம்மதியர்கள் பெரும்பாலும் ஆற்காட்டிலும், வேலூரிலும் வசிக்கிறார்கள். வடபாகத்தில் தெலுங்கும், தென்பாகத்தில் தமிழும் வழங்குகின்றன.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—இந்த ஜில்லாவில் இருப்புப்பாதைகள் நாலாபக்கங்களிலும் இருப்பதால் போக்குவரவுக்கு யாதொரு கஷ்டமின்றிப் பிரயாணம் செய்யலாம்.

**விவசாயம், வர்த்தகம்:** — இந்த ஜில்லாவில் முக்கியமான கைத்தொழில் நெசவு. பிரதான விளைபொருள்



கள் நெல், சோளம், கேழ்வரகு, சணல், பருத்தி, கரும்பு, வெற்றிலை, அவுரி முதலியவைகளும் பயிரிடப்படுகின்றன. ஏழைகள் கேழ்வரகையும், தனவான்கள் அரிசியையும் புசித்து ஜீவிக்கிறார்கள். இந்த ஜில்லாவில் மாம்பழமும் கிச்சிலிப்பழமும் மிகுதி. கிச்சிலிப்பழங்கள் மலையடிவாரத்தில் **சாத்தக்குடி** என்னும் கிராமத்தில் உண்டாகின்றன.

**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லா கலெக்டரும் மற்ற ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும் வசிக்குமிடம் **சித்தூர்**. **வேலூர்** சப்கலெக்டர் டிவிஷனில் தலைப்பட்டணம். பாலாற்றின் கரையிலிருக்கிற **ஆற்காடு** முற்காலத்தில் கர்னாடக நவாபு துரைத்தனத்தாருடைய இராஜதானியாக இருந்தது. 1751-ம் வருஷத்தில் காப்டன் க்ளைவு (Captain Clive) என்பவர் ஆற்காட்டுக் கோட்டையைப் பிடித்து, இராஜாசாஹிப் (Rajah Sahib) முற்றுகை போட்டபொழுது வீரத்துடன் நிலைக்கச்செய்த விவரம் இந்துதேச சரித்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஜில்லாவின் தென்கிழக்கிலுள்ள **வந்தவாசி** என்னும் ஊர் 1760-ம் வருஷத்தில் யுத்தம் நடந்த இடம். அச்சண்டையில் கர்னல் கூட் (Col. Coote) என்பவரால் நடத்தப்பட்ட இங்கிலீஷ் இராணுவம் கவுண்ட் லாலி (Count Lally) புஸ்ஸி (M. Bussy) என்பவர்களால் நடத்தப்பட்ட பிரான்சு இராணுவத்தை முறியடித்தது. இங்கிலீஷ்காரர் இந்த யுத்தத்தில் அடைந்த வெற்றியானது இந்தியாவில் பிரான்சுக்காரர்களுடன் போர்செய்து அடைந்த வெற்றிகளில் மிகச் சிறந்தது. **அரக்கோண**மானது மதராசிலிருந்து பம்பாயிக்கும் கள்ளிக்கோட்டைக்கும் போகிற இரண்டு இருப்புப்பாதைகள் சந்திக்கிற இடத்தில் இருக்கிறது. இந்த ஜில்லாவின் வடக்கிலுள்ள **திருப்பதி** 2,500 அடி உயரமான மலையின்மீதுள்ள தேவாலயத்தால் பேர்பெற்றது. தென்னிந்தியாவிலுள்ள புண்ணிய ஸ்தலங்களில் இது மிகச் சிறந்ததென்று இந்துக்கள் கொண்டாடுகிறார்





VELLORE FORT.—வேலூர் கோட்டை.



கள். **சந்திரகிரி** என்னும் ஊர் விஜயநகரம் அரசர்களின் இராஜதானியாக விருந்தது. தற்காலத்தில் ஸெண்டு ஜார்ஜு-கோட்டை கட்டியிருக்குமிடத்தை **கிழக்கு இந்தியா கம்பெனியாருக்கு**, இவ்வரசர்களில் ஒருவர் கொடுப்பதாகச் செய்த உடன்படிக்கை 1640-ம் வருஷத்தில் இந்த ஊரில்தான் கையெழுத்து வைக்கப்பட்டது.

## தேன்ஆற்காடு ஜில்லா.

**இருக்குமிடம்:** — இந்த ஜில்லா வடக்கே செங்கற்பட்டுக்கும், தெற்கே தஞ்சாவூருக்கும் மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:** — இந்த ஜில்லாவில் மேற்கிலும் வடமேற்கிலுமுள்ள குன்றுகள் இருக்குமிடம்தவிர மற்றெங்கும் கர்னாடக சமவெளியைச் சேர்ந்தது. இங்கே நல்ல மழை பெய்கிறது.

**மலை, ஆறு:** — இந்த ஜில்லாவின் மேற்கெல்லையில் **காளேரிமலையும்** வடமேற்கெல்லையில் **ஜவ்வாதுமலையு**மிருக்கின்றன. **திருவண்ணாமலை** மாத்திரம் சமவெளியின் மத்தியிலிருக்கிறது; அதன் உயரம் 2,700 அடி. இந்த ஜில்லாவுக்கும் தஞ்சாவூருக்கும் மத்தியில் ஓடுகிற **கோள்ளிடம்** இங்கு முக்கியமான நதி. மைசூர் இராஜ்யத்தின் கிழக்குபாகத்தில் உற்பத்தியாகிற **பெண்ணையாறு** இந்த ஜில்லாவில் 75 மைல் ஓடி கூடலூருக்குச் சமீபத்தில் சமுத்திர சங்கமமாகின்றது. **வெள்ளாறு** இந்த ஜில்லாவின் தென்பாகத்திற் சென்று, பரங்கிப்பேட்டைக்குச் சமீபத்தில் கடலில் விழுகிறது.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 21,60,000. இத்தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள்; முக்கியமான பாஷை தமிழ்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னப்பட்டணத்திலிருந்து தஞ்சாவூருக்குப் போகிற தென்னிந்தியா





PONDICHERRY.—புதுச்சேரி



இருப்புப்பாதை இந்த ஜில்லாவில் தென்திசையாய்ப் போகிறது. **விழுப்புரம்** ஸ்டேஷனில் இரண்டு கிளைப் பாதைகள் தொடங்கி ஒன்று கிழக்கே புதுச்சேரிக்கும், மற்றொன்று வடமேற்கே வேலூருக்கும் போகின்றது.

**விவசாயம், வர்த்தகம்:**—இந்த ஜில்லாவில் முக்கிய விளைபொருள் நெல், கம்பு, வரகு, கேழ்வரகு, ஆமணக்கு, எள்ளு, சோளம், அவுரி, கரும்பு இவைகளும் விளைகின்றன. நீலம், உப்பு, சர்க்கரை, எண்ணெய், பாய், பயறு, துணி இவை முக்கிய கைத்தொழிற் பொருள்கள். இந்த ஜில்லாவில் இரும்பு அதிகமாய்க் கிடைக்கும்.

**முக்கிய பட்டணங்கள்:**—கூடலூர் என்னும் முக்கிய பட்டணம் இந்த ஜில்லா கலெக்டரும் மற்ற ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும் வசிக்குமிடம். இது விசேஷ வர்த்தகமுள்ள துறைமுகப் பட்டணம். **சிதம்பரத்தில்** புராதனமாயும் அழகாயுமுள்ள ஒரு சிவஸ்தலமிருக்கிறது. **பரங்கிப்பேட்டை** வெள்ளாற்று முகத்துவாரத்தில் துறைமுகப்பட்டணமாயும் ரைல்வே ஸ்டேஷனுமிருக்கிறது. **திருவண்ணாமலை** 2,700 அடி உயரமுள்ள ஒரு மலையின்மேல் இருக்கிறது; இதில் ஒரு கோட்டையும், சிறந்த தேவாலயமும் உண்டு. **விழுப்புரம்** முக்கிய ரைல்வே ஜங்ஷன். இச்சில்லாவில் **புதுச்சேரி**யானது சென்னபட்டணத்துக்கு 100 மைல் தெற்கிலுள்ள பிரான்சுக்காரருடைய பிரதான பட்டணம். இதில் அதிக வியாபாரம் நடக்கிறது.

## திரிச்சிராப்பள்ளி ஜில்லா.

**இருக்குமிடம்:**—இது தஞ்சாவூர் மதுரை ஜில்லாக்களுக்கு மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:**—சமபூமியாயுள்ள இந்த ஜில்லா செழிப்பாயும் நீர்வளமுள்ளதாயுமிருக்கிறது. காவேரியாற்





THE ROCK AND WATER TANK, TRICHINOPOLY.—திரிச்சிராப்பள்ளியிலுள்ள கல்பாறையும் குளமும்.



றில் தவருமல் பிரவாகம் வந்து சாகுபடி தாழ்வில்லாமல் நடப்பதால் இந்த ஜில்லாவில் பஞ்சம் இதுவரையில் சம்பவிக்கவில்லை. இது சென்னை இராஜதானியிலுள்ள உஷ்ணமிகுந்த ஜில்லாக்களில் ஒன்ருக இருந்தாலும் பெரும்பாலும் தேகசௌக்கியமுள்ளது.

**மலை, ஆறு:**—2,500 அடி உயரமுள்ள **பச்சைமலை** இந்த ஜில்லாவின் வடமேற்கிலிருக்கிறது. முக்கியமான நதிகள் **காவேரியும்,** அதன் கிளைநதியாகிய **கொள்ளிடமும்.** திரிச்சிராப்பள்ளி பட்டணத்துக்கு மேற்கில், கொள்ளிடமானது காவேரியிற் பிரிந்து அப்பட்டணத்துக்குக் கிழக்கே 10 மைல் தூரத்தில் காவேரியாற்றிற்கு அதிக சமீபத்தில் ஓடுகிறது. ஆகையால் இவ்விரண்டு நதிகளுக்கும் மத்தியிலுள்ள **ஸ்ரீரங்கம்** என்னும் பட்டணத்தை ஒரு தீவு என்னலாம். **வெள்ளாறு** இதற்கும் தென்னுற்காட்டுக்கும் மத்தியில் ஓடுகிறது.

**ஜனத்தொகை, பாஷை:** — இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 13,77,000. இத்தொகையில் பெரும்பான்மைபோர் இந்துக்கள்; மற்றவர்கள் கிறிஸ்தவர்களும் சொற்ப மகம்மதியர்களுமாம். தமிழ் பிரதான பாஷையாயினும் ஜனத்தொகையில் சில் ஒருபாகம் ஜனங்கள் தெலுங்கும் பேசுகிருர்கள்.

**விவசாயம், வர்த்தகம்:** — காவேரியும், கொள்ளிடமும் பாய்கிற இடங்களில் முக்கியமான நன்செய்ப்பயிர் நெல், புன்செய்ப்பயிர்கள் சோளம், கேழ்வரகு, பருத்தி, புகையிலை, அவரி முதலியவைகளும் விளைகின்றன. முக்கியமான கைத்தொழில்கள் நெசவும், சுருட்டி செய்தலும். சுருட்டு செய்வதற்கு வேண்டிய புகையிலை பெரும்பாலும் **திண்டுக்கல்லிலிருந்து** வருகிறது. சிறந்த தங்கநகைகளும் செய்யப்படுகின்றன.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னையினின்று தூத்துக்குடிக்குப் போகும் இருப்புப்பாதை இந்த ஜில்லாவின் மூலமாய் செல்கின்றது. திரிச்சிராப்பள்ளியினின்று ஒரு கிளை மேற்காய் ஈரோட்டுக்குப் போகின்றது.



**முக்கிய பட்டணங்கள்:** — **திரிச்சிராப்பள்ளி** நகரம் காவேரியாற்றங்கரையிலுள்ள பிரதான பட்டணம். இதில் செய்யப்படும் சுருட்டினுலும் அழகிய தங்கநகையினுலும் இது பெயர்பெற்றது. இது முற்காலத்தில் கர்னுடக நவாபாகிய மகம்மதாலியின் இராஜதானியாக இருந்தது. திரிச்சிராப்பள்ளிக்கு 2 மைல் வடக்கே உள்ள **ஸ்ரீரங்கம்** என்னும் பட்டணம், காவேரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையிலிருக்கிற தீவின் மத்தியிலிருக்கிறது. அது விஷ்ணு ஆலயத்தால் சிறந்தது.

## தஞ்சாவூர் ஜில்லா.

**இருக்குமிடம்:**—இந்த ஜில்லாவின் வடக்கெல்லை தென் ஆற்காடும், தெற்கெல்லை கடலும் மதுரையுமாம்.

**தோற்றம்:** — இந்த ஜில்லாவை தென்னிந்தியாவின் நெற்களஞ்சியம் என்னலாம். இதன் வடபாகத்தில் காவேரி ஓடுகிறபடியால் அங்கு நெல்வயல்களும் அவை மத்தியில் தென்னந்தோப்புகளும் நிரம்பியிருக்கின்றன; இதில் குடிவளம் மிகுதி. வருஷத்தில் தேவையான மழை பெய்யும்.

**மலை. ஆறு:**—குன்று என்னும் பெயருடையது ஒன்றுவது இந்த ஜில்லாவில் எங்கும் இல்லை. முக்கியமான ஆறு **காவேரி** ஒன்றுதான். இந்த ஆற்றின் கிளையாகிய கொள்ளிடம் இந்த ஜில்லாவுக்கும் தென்னுற்காட்டுக்கும் மத்தியில் சென்று பாங்கிப்பேட்டைக்குச் சமீபத்தில் கடலில் சங்கமமாகின்றது. காவேரிநதி திரிச்சிராப்பள்ளிக்குக் கிழக்கில் தஞ்சாவூர் ஜில்லாவில் சென்று பல சிற்றுறுகளாகப் பிரிகிறது.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவில் ஜனத்தொகை மிகுதி; அது 22,27,000. இத்தொகையில்



பெரும்பான்மையோர் இந்துக்கள், மற்றவர்கள் மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களுமாம். மற்ற ஜில்லாக்களைப் பார்க்கிலும் இங்கு பிராமணர்கள் மிகுதி. மகம்மதியர்களில் 5ல் 4 பாகம் ஜனங்கள் தமிழ் பேசுகின்ற லப்பைகள். இந்த ஜில்லாவில் வழங்கும் பாஷை தமிழ்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—இச்சாதனங்கள் இங்கு சிறந்திருக்கின்றன. சென்னப்பட்டணத்தினின்று தூத்துக்குடிக்குப் போகும் பாதை இச்சில்லா வழியாய் செல்கின்றது. தஞ்சாவூரினின்று ஒரு பாதை நாகூருக்கும், மாயவரத்தினின்று ஒரு பாதை பட்டுக்கோட்டைக்கும், மற்றொன்று காரைக்காலுக்கும் உண்டு. நாகப்பட்டணத்திலிருந்து தெற்கே 43 மைல் நீளமுள்ள ஒரு கால்வாயுமுண்டு.

**விவசாயம், வர்த்தகம்:**—இந்த ஜில்லாவில் நெற்பயிர் வெகு அதிகம். கேழ்வரகு, துவரை, வரகு, கம்பு இவையாகிய புன்செய்ப்பயிர்கள் சொற்பமாய்ப் பயிரிடப்படுகின்றன. தென்னை இச்சில்லாவில் எங்கும் உண்டு. பித்தளைப்பாத்திரம், பட்டுவஸ்திரம், கம்பளம், நெட்டியினாற்செய்யும் சாமான்கள் இவைகள் செய்யப்படுகின்றன. முக்கியமான ஏற்றுமதிச் சரக்கு அரிசி.

**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லாவின் பிரதான பட்டணம் **தஞ்சை நகரம்**; இது முற்காலத்தில் சோழ நாட்டின் இராஜதானி. இப்பொழுது இது இந்துக்களால் ஒரு புண்ணிய ஸ்தலமாகக் கொண்டாடப்படுகிறது. இங்கு இத்தேசத்தில் சிறந்ததாக எண்ணப்பட்ட ஒரு பெரிய ஆலயம் உண்டு. இங்கு அருமையான நகைகள், பட்டுச் சமுக்காளம், நெட்டியினாலாகும் கோவில் முதலிய பலவித சித்திரவேலைகள் இவைகள் செய்யப்படுகின்றன. பிராமணர்கள் விசேஷமாய் வசிக்கு மிடமாகிய **கும்பகோணம்**, இந்த ஜில்லாவின் அதிக செழிப்பான பாகத்தில் இருக்கிறது. இது வெகு புராதனமாகிய புண்ணியஸ்தலம். இங்கே (B. A.) பி. ஏ. பரீக்ஷைக்கு படிப்பிக்கும் கவர்ன்மெண்டு





TANJORE TEMPLE.—தஞ்சாவூர் கோவில்.



காலேஜ் ஒன்று இருக்கின்றது. இந்த ஜில்லாவில் முக்கியமான துறைமுகப்பட்டணம் **நாகப்பட்டணம்.** நாகப்பட்டணத்துக்கு வடக்கேயுள்ள துறைமுகப்பட்டணமாகிய **தரங்கம்பாடி** முற்காலத்தில் டேன்சுக்காரரால் ஏற்படுத்தப்பட்டு பிறகு இங்கிலீஷ்காரரால் விலைக்கு வாங்கப்பட்டது. இது வெகுகாலம் இந்த ஜில்லாவின் முக்கிய பட்டணமாயிருந்தது.

## மதுரை ஜில்லா.

**இருக்குமிடம்:**—இந்த ஜில்லா தஞ்சாவூர் திருநெல்வேலி ஜில்லாக்களுக்கு மத்தியாய் கடலோரமடுத்திருக்கிறது. இதில் **இராமநாதபுரம்,** **சிவகங்கை** என்னும் இரண்டு பெரிய ஜமீன்கள் அடங்கியிருக்கின்றன.

**தோற்றம்:**—இந்த ஜில்லாவின் பெரும்பாகம் சமபூமியாய் இருக்கிறது. மேற்குப்புறத்தில் மேற்குத் தொடர்ச்சிமலையின் ஒருபாகமாகிய **பழனிமலைத்தொடர்ச்சி**யிருக்கிறது. கிழக்குக்கரையில் ஒரு முனை இலங்கையிருக்கும் திசையை நோக்கி சமுத்திரத்தில் நீண்டிருக்கிறது. இம்முனையிலிருந்து பாம்பன் கால்வாயினால் பிரிக்கப்பட்ட தீவு **இராமேச்சுவரம்.** இதற்கும் இலங்கைக்கும் மத்தியிலுள்ளது **மன்னார்தீவு.** இவ்விரண்டு தீவுகளுக்கும் இடையில் இந்துக்கள் இராமர் அணையென்ச் சொல்லும் (Adam's Bridge) ஒரு மணற்றிடர் இருக்கிறது. இந்துக்களின் விசேஷயாத்திரை ஸ்தலமாகிய இராமேச்சுவரத்தில் 120 அடி உயரமுள்ள கோபுரத்தையுடைய ஒரு ஆலயமுண்டு. இரும்பு இந்த ஜில்லாவில் எங்கும் அகப்படும்; **திண்டுக்கல்**லில் இதை பரும்படியாய் வேலைக்கு உபயோகிக்கிறார்கள். சமவெளியில் இந்த ஜில்லா உஷ்ணமாயும் வறட்சியாயும் இருக்கிறது. நல்ல மழையில்லை.

**மலை, ஆறு:**—**வராகமலை** என்று சொல்லப்படும் பழனிமலை இந்த ஜில்லாவில் வடகிழக்குத் திசையாய் 54





DINDIGUL ROCK.—திண்டுக்கல் மலை.



மைல் நீளமுள்ளது; இதன் சிகரங்கள் 8,000 அடி உயரம். அவைகளில் ஒன்றாகிய **கோடைக்கானல்** ஐரோப்பியர்கள் வசிப்பதற்குச் சுகமான இடம். இம்மலைத்தொடர்ச்சிக்குக் கிழக்கேயுள்ளது **சிறுமலை;** இதன் உயரம் 3,500 அடி. இந்த ஜில்லாவின் பிரதான நதியாகிய **வைகையாறு** மேற்குத் தொடர்ச்சிமலையில் உற்பத்தியாகி மதுரைப்பட்டணத்துக்கு அருகில் சென்று சமுத்திர சங்கமமாகின்றது.

**ஜனத்தொகை, பாஷை:** — இந்த இராஜதானியில் ஜனத்தொகையில் மூன்றாவது ஜில்லாவாகியது மதுரை; இதன் ஜனத்தொகை 26,10,000. இத்தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள்; மற்றவர்கள் மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களுமாம். இச்சில்லாவில் வழங்கும் பாஷை தமிழ்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—திருநெல்வேலியிலிருந்து திரிச்சிராப்பள்ளிக்கு வடதிசையாய் தென்னிந்தியா இருப்புப்பாதை மதுரை திண்டுக்கல் பட்டணங்களின் வழியாய்ப் போகிறது. மதுரையினின்று ஒருகிளை பாம்பனுக்கும், அம்மையநாயக்கனூரிலிருந்து ஒரு பிரிவு கொடைக்கானலுக்கும் போகின்றது.

**விவசாயம், வர்த்தகம்:**—நெல், சோளம், கம்பு, கேழ்வரகு இவை முக்கியமான விளைபொருள்கள். திண்டுக்கல்லுக்குப் பக்கத்தில் நேர்த்தியான புகையிலையும், சொற்பமாய் அவுரியும், பருத்தியும் விளைகின்றன. தலைக்குட்டைகளும், தாழ்ந்த சீட்டித்துணியும் மதுரைப் பட்டணத்திலும், திண்டுக்கல்லிலும் நெய்யப்படுகின்றன. இங்கு விளையும் புகையிலையால் திரிச்சிராப்பள்ளியில் சுருட்டு செய்யப்படுகிறது.

**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லாவின் பிரதான பட்டணமாகிய **மதுரை** தென்னிந்தியாவின் பெரிய பட்டணங்களில் ஒன்று; இது ஆதிகாலமுதல் தென்னாட்டில் சிறந்த பட்டணமாயும், அநேக நூற்றாண்டு



களாக பாண்டிய அரசர்களின் இராஜதானியாயும் இருந்தது. இதிலிருக்கும் சிவாலயமும், ஆயிரக்கால் மண்டபமும், திருமலைநாய்க்கரால் கட்டப்பட்ட அரண்மனையும் அதிக சிறந்தவை. **திண்டுக்கல்** பெரிய வர்த்தக ஸ்தலம். இங்கிருந்து தோலும், புகையிலையும், காப்பிக்கொட்டையும் ஏற்றுமதியாகின்றன. இதில் 1,200 அடி உயரமான ஒரு பாறையின்மீது கட்டப்பட்ட கோட்டை மிகவும் பலமானது. **சிவகங்கையும், இராமநாதபுரமும்** இப்பேர்கொண்ட ஜமீன்களின் முக்கிய பட்டணங்கள்.

## திருநெல்வேலி ஜில்லா.

**இருக்குமிடம்:**—இந்த ஜில்லா சென்னை இராஜதானியின் தென்கோடியிலிருக்கிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லாவானது மேற்குத் தொடர்ச்சிமலை முதல் கடல்வரையிலுள்ள நீண்ட சமபூமி; இதன் நீளம் 100 மைல். அதிகமாய் அகன்றிருக்குமிடத்தில் இதன் அகலம் 75 மைல்; வடபாகத்திலுள்ள பூமியானது பெரும்பாலும் கரிசல் நிலமாயிருக்கிறது. தெற்கில் செம்மணற் பாங்காயிருக்கிறபடியால் பனைமரம் விசேஷமாய் உண்டாகிறது. இக்காரணத்தினால் இந்த ஜில்லாவை பனையுண்டாகும் ஜில்லாவென்று சொல்வதுண்டு. மேற்குத் தொடர்ச்சிமலையில் உள்ள காடுகளில் தேக்கு, கருங்காலி, வேங்கைமுதலிய விலையுயர்ந்த மரங்கள் உண்டாகின்றன. இந்த ஜில்லா பெரும்பாலும் தேகத்துக்கு சௌக்கியமுள்ளதென்று சொல்லலாம். மலையின்மீது மழை ஏராளமாய்ப் பெய்தபோதிலும் சமவெளியில் பெய்வது சொற்பந்தான்.

**மலை, ஆறு:** — இந்த ஜில்லாவுக்கு அடுத்திருக்கிற மேற்குத் தொடர்ச்சிமலை 4,000 அடி உயரமுள்ளது. அதிலிருந்து முப்பதுக்கதிகமான ஆறுகள் கடலில் சங்கமமானபோதிலும் அவற்றில் முக்கியமான ஆறு





**தாம்பிரபரணி;** செந்நிறமான பூமியில் ஓடுகிறபடியால் இதற்கு அப்பெயர் கிடைத்தது. 80 மைல் நீளமுள்ள இந்நதி திருநெல்வேலிக்கும் பாளையங்கோட்டைக்கும் மத்தியில் ஓடுகிறது. குற்றாலம், பாபவிநாசனம் என்னு மிடங்களில் இது அழகிய ஆகாச கங்கையாய் விழுகின்றது.

**ஜனத்தோகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 19,17,000. இத்தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள்; கிறிஸ்தவர்கள் இங்கு மிகுதி; மற்றவர்கள் மகம்மதியர்கள். இங்குள்ள மகம்மதியர்கள் முக்கியமாய் லப்பை ஜாதியார்கள். இவர்கள் முற்காலத்தில் இங்கு வந்து வர்த்தகஞ்செய்த அரபியர்களின் வம்சஸ்தர்; இந்த ஜாதியார் பேசுவது தமிழ். இப்பாஷையே இந்த ஜில்லாவில் வழங்குகிறது; சிலர் தெலுங்கும் பேசுகிறார்கள்.

**விவசாயம், வர்த்தகம்:**—முக்கியமான விளைபொருள் நெல். இங்கு பருத்தி விசேஷமாய் விளைகிறது. இந்த இராஜதானியில் பருத்தி விளையும் நான்கு ஜில்லாக்களில் இது ஒன்று. கம்பு, சோளம், ஆமணக்கு இவை விசேஷமாய் விளைகின்றன. பனஞ்சாற்றிலிருந்து சாணார்கள் ஏராளமாய்ப் பனைவெல்லம் செய்கிறார்கள். கடலில் முத்துச் சிப்பி எடுக்கிறார்கள்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—வடக்கில் மதுரையிலிருந்துவருகிற இருப்புப்பாதை இந்த ஜில்லா வழியாய்ப் போய் தூத்துக்குடியில் முடிகிறது. இப்பாதையிலிருந்து ஒரு கிளைப்பாதை மணியாச்சி யென்னுமிடத்திலிருந்து தென்மேற்கில் திருநெல்வேலிக்குப் போகிறது.

**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லாவில் அதிக பெரிய பட்டணம் தாம்பிரபரணி யாற்றோரத்திலுள்ள **திருநெல்வேலி.** ஆனால் இந்த ஆற்றின் கீழ்க்கரையிலிருந்து 2 மைல் தூரத்திலுள்ள **பாளையங்கோட்டையை** பிரதானபட்டணம் என்னலாம். **தூத்துக்குடி** பிரதான





TAMBRAPARANI.—தாம்பிரபரணி.



துறைமுகப்பட்டணம்; இது சப் கலெக்டர் வசிக்கும் இடம். இப்பட்டணத்தில் நடக்கும் வியாபாரத்தின் விசேஷத்தினுல் இந்த இராஜதானியின் இரண்டாவது துறைமுகப்பட்டணமாக இதைச் சொல்லலாம். இங்கு தென்னிந்தியா இருப்புப்பாதை முடிகின்றது.

## மலையாளம் ஜில்லா.

**இருக்குமிடம்:**—இது தென்கன்னடத்திற்கும் கொச்சி சமஸ்தானத்திற்கும் மத்தியிலிருக்கிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லா கடற்கரைபோரமாய் 145 மைல் நீளமுள்ளது. இதன் அகலம் வடக்கில் 25 மைலா யும், தெற்கே போகப்போக விரிவாகி 70 மைலளவும் இருக்கிறது. மேற்குத் தொடர்ச்சி மலைமீதுள்ள நாட்டுக்கு **வயநாடு** என்று பெயர்; இம்மலைகளில் உற்பத்தியாகிவருகிற அநேக சிற்றாறுகள் கடற்கரையோரமாய் தொடர்ச்சியான கழிகளாக அமைந்திருக்கின்றன.

இந்த ஜில்லாவிலுள்ள காடுகள் வெகு விசாலமாயும் அதிக பலன் தரத்தக்கவைகளாயும் இருக்கின்றன. இந்த ஜில்லாவில் பூமியானது ஈரமுள்ளதாயிருந்தபோதிலும் தேகத்துக்குப் பெரும்பாலும் சௌக்கியமுள்ளது. ஆனுல் மலையடிவாரத்தில் சில காலங்களில் ஜனங்களுக்குக் காய்ச்சல் வருகிறதுண்டு; இந்த ஜில்லாவில் மழை வெகு அதிகம்.

**மலை, ஆறு:**—மேற்குத் தொடர்ச்சிமலைகள் 5,000 அடிவரையில் உயர்ந்திருக்கின்றன. இந்த ஜில்லாவின் தென்பாகத்திற்கு அருகிலுள்ள நீலகிரி மலையின் உயரம் 7,000 அடி. நீலகிரிக்குத் தென்பாகத்திலுள்ள பிரசித்தமான கணவாய்க்குப் **பாலக்காட்டுக் கணவாய்** என்று பெயர். இக்கணவாயின் அகலம் 25 மைல். இதன் வழியாய்க் கிழக்குக் கடற்கரையிலிருந்து மேற்குக் கடற்கரைக்கு ஓர் இருப்புப்பாதை போகிறது. இதற்குத் தெற்





FORT ST. ANGELS, CANNANORE.—கண்ணனூரிலுள்ள ஸெயின்ட் ஏன்ஜெல்ஸ் கோட்டை.



கே மகா உன்னதமான **ஆனைமலை** யிருக்கிறது. பிரதான நதியாகிய **பொன்னானி** ஆனைமலையில் உற்பத்தியாகி பாலக்காட்டின் வழியாய்ச் சென்று பொன்னானி துறைமுகத்தில் கடலில் சங்கமமாகிறது.

**கழிகள்:**—இந்த ஜில்லாவின் கடலோரமாய் அமைந்திருக்கிற தொடர்ச்சியான கழிகளுக்கும் கடலுக்கும் இடையில் நீண்ட அகலமற்ற நிலவெளி இருக்கின்றது. இது எவ்விடத்திலும் கால்மைலுக்கு அதிக அகலமுள்ளதல்ல.

**ஜனத்தொகை, பாஷை:**—ஜனத்தொகையில் இந்த ஜில்லா சென்னை இராஜதானியில் இரண்டாவதாக இருக்கிறது. ஜனத்தொகை 26,50,000. இதில் ஏறக்குறைய முக்காற்பாகம் இந்துக்கள்; மற்றவர்கள் விசேஷமாய் மகம்மதியர்களும் சொற்ப கிறிஸ்தவர்களுமாம். இங்குள்ள மகம்மதியர்கள் பெரும்பாலும் மாப்பிள்ளைமார்கள். பிராமணர்களுக்கு நம்பூரிகள் என்று பெயர். சூத்திரர்களில் மேற்குலத்தாருக்கு நாயர்கள் என்று பெயர். கீழ்க்குலத்தாராகிய தீயர்கள் தென்ஜில்லாவில் சாணார்கள் என்னும் ஜாதியாருக்குச் சமனாய் உள்ளவர்கள். மலையாளத்தில் இந்துக்கள் நடைஉடைபாவனைகளில் மற்றெங்குமுள்ள இந்துக்களிலிருந்துபெரும்பாலும்வேறுபட்டிருக்கிறார்கள். நம்பூரிமார்களில் மூத்தகுமாரன் மாத்திரம் கலியாணம் செய்துகொள்ளவும் குடும்பச் சொத்தை யடையவுங்கூடும்; மற்ற குமாரர்களுக்கு இவ்விதமான பாத்தியதையில்லை. மற்றப் பிராமணர்களுக்கு இல்லாத வேறொரு வழக்கம் என்னவெனில், நம்பூரிமார்களின் பெண்களில் சிலர் வெகுபிராயம் வரையிலும், சிலர் ஆயுள்நாள் முழுவதும் விவாகம் செய்துகொள்ளாமல் இருந்துவிடுகிறார்கள். நாயர்மார் ஸ்திரீகளுக்கு விசேஷ கௌரவமுண்டு; இந்த நாட்டில் ஆஸ்திக்குச் சுதந்திரமானவர்கள் பெண்பிள்ளைகளே. ஆகையால் ஒருவன் சொத்துக்குச் சுதந்திரவாளிகள் அவன் சொந்தப் பிள்ளைகளல்ல; அவனுடைய



சகோதரியின் பிள்ளைகளே அவனுக்கு உத்தரக்கிரியை செய்து அவன் சொத்தையடைய பாத்தியமுள்ளவர்கள். மற்ற இடங்களிலுள்ள இந்துக்கள் தலைக்குப் பின்புறம் வைத்திருக்கும் குடுமியை இந்நாட்டிலுள்ளவர்கள் தலையின் உச்சியில் வைத்து அதை நெற்றியில் தொங்கும்படி விடுகிறார்கள். இந்த ஜில்லாவில் வழங்கும் பாஷை மலையாளம்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னை இருப்புப்பாதையானது தலைச்சேரிக்குப் போய் முடிகிறது. கடற்கரையில் முக்கியமாய் கழிகள் மூலமாய் போக்குவரவு நடக்கிறது. ஜனங்கள் இக்கழிகளை படவுகளினால் கடக்கிறார்கள்.

**விவசாயம், வர்த்தகம்:**—முக்கிய கைத்தொழில் துணி நெய்தல், ஓடு செய்தல். நெல் முக்கியமான விளைபொருள். காப்பிக்கொட்டை வயநாடு தாலூகாவிலும், மிளகு, இஞ்சி இவை பல தோட்டங்களிலும் உண்டாகின்றன. கடற்கரையில் எண்ணிறந்த தென்னந்தோப்புகள் அடர்ந்திருக்கின்றன. முக்கியமான ஏற்றுமதிப் பொருள்கள் தேங்காய், கயிறு, காப்பிக்கொட்டை, மிளகு, இஞ்சி, பாக்கு, ஏலம், மீன். குடகிலும், நீலகிரியிலும் விளைகின்ற காப்பிக்கொட்டை தலைச்சேரியிலும், கள்ளிக்கோட்டையிலும் ஏற்றுமதி செய்யப்படுகின்றது.

**முக்கிய பட்டணங்கள்:** — பிரதான பட்டணமாகிய **கள்ளிக்கோட்டை** இந்த ஜில்லாவில் மிகவும் பெரிதான பட்டணம். இது முற்காலத்தில் ஜாமொரின் இராஜ்யத்திற்கு இராஜதானியாயிருந்தது. இந்த இராஜவம்சத்தார் ஜாமொரின் என்னும் பட்டப்பேர் வகித்து இங்கு இப்போதும் வசிக்கிறார். கள்ளிக்கோட்டைக்கு வடக்கிலுள்ள **தலைச்சேரி** சப்கலெக்டரும், வடமலையாளம் ஸிவில் ஜட்ஜியும் வசிக்குமிடம். இந்தத் துறைமுகப் பட்டணத்திலிருந்து மிளகும், காப்பிக்கொட்டையும், இஞ்சியும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. தலைச்சேரிக்கு



வடக்கிலிருக்கும் துறைமுகப்பட்டணமாகிய **கண்ணனூர்** சிறந்த இராணுவஸ்தலம். உள்நாட்டிலுள்ள பட்டணங்களில் மிகப்பெரிதாகிய **பாலக்காடு**, ஹெட் அசிஸ்டாண்டு கலெக்டர் வசிக்குமிடம். இந்த ஜில்லாவின் தென்கோடியிலிருக்கும் **கோச்சி** கப்பல் தங்குவதற்கு வசதியாகிய ஒரு துறைமுகப்பட்டணம். யூதர்கள் 1,000 வருஷத்திற்கு அதிக காலமாய் இந்த இடத்தில் குடியேறி இருக்கிறார்கள். மாப்பிள்ளைமார்களிருக்கும் துறைமுகப்பட்டணமாகிய **பொன்னானி** கள்ளிக்கோட்டைக்கும் கொச்சிக்கும் மத்தியிலுள்ள விசேஷமான பட்டணம். தலைச்சேரிக்குத் தெற்கில் 4 மைல் தூரத்திலுள்ள ஒரு சிறு துறைமுகப்பட்டணமாகிய **மாஹி**யென்பது பிரான்சுக்காரர் ஆளுகைக்குட்பட்டது. **வேப்பூர்** கள்ளிக்கோட்டைக்குத் தெற்கில் 6 மைல் தூரமுள்ள ஒரு சிறிய துறைமுகப்பட்டணம். இது சென்னை இருப்புப்பாதையானது மேற்குக்கரையில் முன்பு முடிந்திருந்த இடம்.

## தென்கன்னடம் ஜில்லா.

**இருக்குமிடம்:**—இது மேற்குக்கரையில் வடகோடி ஜில்லா. இதற்குத் தெற்கிலிருப்பது மலையாளம்.

**தோற்றம்:**—மேற்குத் தொடர்ச்சிமலை முதல் கடல்வரைக்கும் பரவியிருக்கிற இந்த ஜில்லா கடற்கரையோரமாய் 100 மைல் நீளமும் 40 முதல் 60 மைல் வரையில் அகலமும் உள்ளது. கடற்கரையோரத்திலுள்ள பிரதேசங்களில் ஜனத்தொகை மிகுதி. மலையின்மீதுள்ள விசாலமான காடுகளில் உன்னதமான விருக்ஷங்களும், மிளகு, ஏலக்காய், கடுக்காய், பிசின், குங்கிலியம், சாயச்சரக்குகள், தேன், மெழுகு இவைபோன்ற விலையுயர்ந்த பொருள்களுமுண்டாகின்றன. கடற்கரையோரத்திலுள்ள பூமி தேகத்துக்குச் சௌக்கியமுள்ளது; ஆனால் உள்நாட்டில் காய்ச்சல் ஜனங்களை மிகுதியாய்





JAIN STATUE OF GUMTARAJ.

கும்தராஜ் என்னும் ஜயின விக்கிரகம்.

வருத்தும். இந்த ஜில்லாவில் மழை வெகு அதிகமாய்ப் பெய்யும்.

**மலை, ஆறு:**—மேற்குத் தொடர்ச்சிமலை இந்த ஜில்லாவில் 3,000 அடிமுதல் 6,000 அடிவரையில் உயர்ந்திருக்கிறது. இதில் அதிக உன்னதமான சிகரமாகிய **குதிரைமுகம்** 6,200 அடி உயரமுள்ளது. இதில் பல ஆறுகள் உண்டு; இவைகளில் ஒன்றாவது 100 மைலுக்கு அதிக நீளமுள்ளதல்ல. முக்கியமான நதி **நேத்திராவதி.**



**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 10,55,000. இந்தத் தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள்; இவர்களில் ஒரு புராதன ஜாதியார்கள் ஜயினர்கள். ஆனால் இங்கு மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் விசேஷமாய் வசிக்கிறார்கள். இம்மகம்மதியர்கள் எல்லாரும் மாப்பிள்ளைமார்கள்; அவர்கள் மலையாளபாஷைக்குச் சம்பந்தமான ஒரு பாஷை பேசுகிறார்கள். இந்த ஜில்லாவில் வழங்கும் பாஷைகள் (1) துளுவம், (2) கன்னடம், (3) மலையாளம், (4) கொங்கணி; துளுவம் பேசுகிறவர்கள் அதிகம். சர்க்கார் நடவடிக்கைகளுக்கு உபயோகமான பாஷை கன்னடம். இந்த பாஷை பெரும்பாலும் எல்லாருக்கும் தெரியும். கன்னடம் இந்த ஜில்லாவின் வடபாகத்திலும், துளுவம் மத்தியிலும், மலையாளம் தெற்கிலும் வழங்குகின்றன.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—தலைச்சேரியினின்று இந்த ஜில்லாவிலுள்ள மங்களூர் வரையில் இப்பொழுது இருப்புப்பாதை போடப்பட்டு வருகின்றது. இது முடிந்தபின்பு போக்குவரவு மிகவும் சுலபமாயிருக்கும். வியாபாரத்துக்கு அனுகூலமான இரண்டொரு கழிகள் இருக்கின்றன.

**விவசாயம், வர்த்தகம்:** — முக்கிய விளைபொருள் நெல்; கடலோரத்தில் எண்ணிறந்த தென்னமரங்கள் உண்டாகின்றன. உள்நாட்டில் பாக்குமரம் வெகு செழிப்பாய் உண்டாகிறது. முக்கியமான வர்த்தகச் சரக்குகள் காப்பிக்கொட்டை, நெல், உப்பு, சந்தனத்தைலம், பாக்கு, வாசனைத்திரவியங்கள், உப்பிட்டமீன் ஆகிய இவைகள். மைசூரிலிருந்தும், குடகிலிருந்தும் காப்பிக்கொட்டை இந்த ஜில்லா வழியாக மங்களூர் துறைமுகத்திற்குப் போய் அங்கிருந்து ஏற்றுமதியாகிறது. சந்தனத்தைலம் மைசூரிலிருந்து வருகிற சந்தனக்கட்டையிலிருந்து செய்யப்படுகிறது. மங்களூரில் நெசவுக்கு வேண்டிய யந்திரசாலைகளும் அச்சுக்கூடங்களும் உண்டு.



**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லாவில் பிரதான பட்டணமாகிய **மங்களூர்** பெரிய துறைமுகப்பட்டணம். அதற்கு வடக்கேயுள்ள **உடுப்பி** அதிலுள்ள ஆலயங்களால் சிறந்தது. இந்த ஜில்லாவின் வடகோடியிலிருக்கும் **குந்தாபுரம்** சப்கலெக்டர் வசிக்குமிடம். இந்த ஜில்லாவில் கார்கால என்னும் பட்டணத்தில் கும்தராஜா வென்று சொல்லப்படுகிற பெயர்பெற்ற விக்கிரகம் ஒன்றுண்டு. இது ஒரே கல்லின்மீது வெட்டப்பட்டு 42 அடி உயரமுள்ளதாயிருக்கிறது.

## பல்லாரி ஜில்லா.

**இருக்குமிடம்:** — இதன் வடக்கில் ஐதராபாத்து, மேற்கில் பம்பாய் இராஜதானி, கிழக்கில் கர்நூல், தெற்கில் மைசூர். மேற்கெல்லைக்கும் இந்த ஜில்லாவுக்கும் மத்தியில் துங்கபத்திரா நதி ஓடுகிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லா பெரும்பாலும் விருக்ஷங்களில்லாத விசாலமான சமபூமியாயிருக்கிறது. சுற்றிலெங்கும் பரவியிருக்கிற கரிசற் பூமியினிடையில் இங்குமங்கும் வெகு பெரிய குன்றுகள் உண்டு. பூமி அதிக வறட்சியுள்ளது. இங்கு மழை மிகக் குறைவு.

**மலை, ஆறு:**—மேற்கிலுள்ளது **சந்தூர் (Sandur)** என்னும் மலை; அதன் சிகரம் **ராமதுர்க்கம்**. இது குளிர்ச்சியாயிருப்பதால் இந்த ஜில்லாவிலுள்ளவர்கள் சவுக்கியத்துக்காக இங்கு போவதுண்டு. **துங்கபத்திரா நதி** வடமேற்கெல்லையில் ஓடுகிறது. இதற்கு உபநதிகள் இரண்டு. அவைகளில் **வேதவதி நதி** கிழக்குப் பாகத்திலுள்ள தாலூகாக்களின் வழியாய் ஓடுகிறது. மேற்கிலுள்ள நதி **அக்கஹரியாறு**. இவ்விரண்டும் மைசூரில் உற்பத்தியாகி தெற்கு வடக்காக ஓடுகின்றன.

**ஜனத்தொகை, பாஷை:** — மற்ற ஜில்லாக்களுடன் ஒத்துப்பார்க்கில் இந்த ஜில்லாவில் குடிவளம் மிகவும்



குறைவு; ஜனத்தொகை 9,00,000 ' தான். இதில் பெரும்பான்மையோர் இந்துக்கள், மற்றவர்கள் விசேஷமாய் மகம்மதியர்கள். மேற்குப் பாகத்தில் கன்னடமும், கிழக்குப் பாகத்தில் கன்னடமும் தெலுங்கும் பேசுகிறார்கள்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:** — சென்னையிலிருந்து பம்பாய்க்குப் போகிற இருப்புப்பாதை இந்த ஜில்லாவின் வடகிழக்கெல்லையில் போகிறது. மேற்குக் கடற்கரையில் மார்மகோவாவிலிருந்து கிழக்குக் கரையில் பெஜவாடாவுக்குப் போகிற தென் மஹாராஷ்டிர இருப்புப்பாதை இந்த ஜில்லா மூலமாய்ச் செல்லுகின்றது.

**விவசாயம், வர்த்தகம்:**—இந்த ஜில்லாவில் நன்செய் சாகுபடி கிடையாது. முக்கியமான புன்செய்ப்பயிர்கள் சோளமும் கேழ்வரகும். பருத்தி விசேஷமாய்ப் பயிராகின்றது; ஆமணக்கு, எள்ளு, சணல், அவுரி இவைகளும் சொற்பமாய்ப் பயிரிடுகிறார்கள். இங்கு உண்டாகும் பருத்தியை சென்னைக்கும் பம்பாய்க்கும் ஏற்றுமதி செய்வதுமன்றி, அதினால் வஸ்திரமும், கயிறும், நாடாவும், சமுக்காளமும் செய்கிறார்கள். மேற்குப் பாகத்திலுள்ள தாலூகாக்களில் கம்பளங்கள் நெய்யப்படுகின்றன.

**முக்கிய பட்டணங்கள்:** — இந்த ஜில்லாவில் பிரதான பட்டணம் **பல்லாரி**. இது சிவில் உத்தியோகஸ்தர்களும் இராணுவ உத்தியோகஸ்தர்களும் வசிக்குமிடம். இதனருகில் ஒரு பலமான கோட்டை கட்டப்பட்டிருக்கிறது. சென்னை இருப்புப்பாதைக்குச் சமீபத்திலுள்ள **ஆதவானி** என்னும் பட்டணத்தில் விசேஷமாய்த் துணிகளும், சமுக்காளங்களும் நெய்யப்படுகின்றன.





TIPPU'S ROCK, BELLARY.—பல்லாரியிலுள்ள திப்புவின் கற்பாறை.



## அனந்தபுரம் ஜில்லா.

**இருக்குமிடம்:**—வடக்கே கர்நூலும், பல்லாரியும்; கிழக்கே கடப்பையும்; தெற்கிலும் மேற்கிலும் மைசூர் இராஜ்யமும், இந்த ஜில்லாவின் எல்லைகளாக இருக்கின்றன.

**தோற்றம்:**—இந்த ஜில்லாவின் வடபாகம் இங்கு மங்கும் சிறிய குன்றுகளையுடைய ஒரு சமவெளி; இங்கு விருக்ஷங்கள் இரா, தண்ணீரும் இல்லை. எங்கிலும் கரிசற்பூமியாயிருக்கிறது. தென்பாகம் 2,600 அடி உயரமுள்ள ஒரு பீடபூமி. இப்பூமி அதிக வறட்சியுள்ளது; இங்கு பெய்யும் மழை மிகச் சொற்பம். இந்த ஜில்லா பெரும்பாலும் உஷ்ணமாயும் தேகத்துக்கு அசௌக்கியமாயுமிருக்கிறது.

**மலை, ஆறு:**—இங்குள்ள ஒரே ஆறாகிய **வடபெண்ணை** மைசூர் இராஜ்யத்தில் உற்பத்தியாகி இந்த ஜில்லாவின் 5 தாலூகாக்களின் வழியாக வடகிழக்குத் திசையாய் ஓடி கடப்பை ஜில்லாவுக்குப் போகிறது. இங்கு மலைத் தொடர்ச்சிகள் இல்லை. துர்க்கம் என்று பெயரையுடைய குன்றுகள் மிகுதி. இவைகளில் **குத்தி**யும் **பெனுகோண்டா**வும் பிரதானமானவை.

**ஜனத்தொகை, பாஷை:** — இந்த இராஜதானியில் மிகவும் சொற்பமாய்க் குடியேறிய ஜில்லாக்களில் இது ஒன்று; இதன் ஜனத்தொகை 7,00,000. இத்தொகையில் 10ல் 9 பாகம் இந்துக்கள்; 10ல் ஏறக்குறைய 1 பாகம் மகம்மதியர்கள். இந்த ஜில்லாவில் பிரதான பாஷை தெலுங்கு; ஆனால் மேற்கிலும் தெற்கிலும் கன்னடம் வழங்குகிறது. மகம்மதியர்கள் இந்துஸ்தானி பேசுகிறார்கள்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னையிலிருந்து பம்பாய்க்குப் போகிற இருப்புப்பாதை இந்த ஜில்லா





PENUKONDA HILL.—பெனுகொண்டாமலை.



வின் வடகிழக்குப் பாகத்தில் போகிறது. வடகோடியி லுள்ள குண்டக்கல்லில் சென்னையிலிருந்து பம்பாய்க் குப்போகிற இருப்புப்பாதையும் மார்மகோவாவிலி ருந்து பெஜவாடாவுக்குப் போகிற இருப்புப்பாதையும் சந்திக்கின்றன. குண்டக்கல்லிலிருந்து பெங்களூருக் குப் போகத் தென்மேற்காய் வேறொரு இருப்புப்பாதை உண்டு.

**விவசாயம், வர்த்தகம்:**—இந்த ஜில்லாவின் வடபா கத்தில் பருத்தியும் தென்பாகத்தில் நெல்லும் விசேஷ மாய் விளைகின்றன. கேழ்வரகும், கம்பும், சோளமும் முக்கியமான புன்செய்ப்பயிர்கள். இவைகள் இங்குள்ள ஜனங்களின் பெரும்பான்மைபேருக்கு முக்கியமான ஆகாரம். பருத்திநூல், வஸ்திரம், கயிறு இவை செய்வது முக்கியமான கைத்தொழில். ஸ்திரீகள் கையில் போட்டுக்கொள்ளுகிற கண்ணாடி வளையல்கள் பல இடங் களில் செய்யப்படுகின்றன. குத்தி தாலுகாவின் சீட்டுத் துணியில் சித்திரம் அச்சிடுதல் முக்கியமான கைத் தொழில்.

**முக்கிய பட்டணங்கள்:**—அனந்தபுரம் இந்த ஜில்லா வின் பிரதான பட்டணம். **குத்தி**யில் அதிக பலமான ஒரு மலைக்கோட்டையுண்டு. இது இப்பொழுது இருப் புப்பாதையிலுள்ள ஒரு பெரிய பட்டணம்.

## கடப்பை ஜில்லா.

**இருக்குமிடம்:** — சென்னை இராஜதானியிலுள்ள ஜில் லாக்களில் இது விஸ்தீரணத்தில் இரண்டாவதாயிருக் கிறது. இதன் வடக்கில் கர்நூல், கிழக்கில் நெல்லூர், தெற்கில் வடஆற்காடு, மேற்கில் அனந்தபுரம் ஜில்லாக் கள் இருக்கின்றன.

**தோற்றம்:** — பால்கொண்டா என்றும் சேஷாசலம் என்றும் பெயர்களையுடைய மலைகளின் தொடர்ச்சியி





GURRAMKONDA.—குர்ரம்கொண்டா மலை.





ளுல் இந்த ஜில்லா தென்பாகம் வடபாகமாக பிரிக்கப்பட்டிருக்கிறது. வடகடப்பையின் கிழக்குப்பாகம் காடடர்ந்த மலைப்பிரதேசமாகவும் மேற்குப்பாகம் கரிசல் நிலமாகவு மிருக்கிறது. தென்கடப்பை எங்கிலும் மலைப்பாங்காயிருக்கிறது. இங்கு மார்ச்சுமாத முதல் ஜூன்மாதம் வரையில் வெகு உஷ்ணமாயிருக்கும். மாரிகாலத்தில் கூடியமட்டும் குளிர்ச்சியாயிருக்கும். இங்கு பெய்யும் மழை கொஞ்சந்தான்.

**மலை, ஆறு:** — இங்கு மூன்று மலைத்தொடர்ச்சிகளுண்டு. **பால்கோண்டா**வென்னும் மலைக்கு அங்குள்ள நேர்த்தியான மேய்ச்சற்றரையினுல் அப்பெயர் கிடைத்தது. இந்த மலை தென்கிழக்கு மூலையிலிருந்து வடமேற்காய் கடப்பைப் பட்டணம் வரையில் நீண்டிருக்கிறது. இம்மலையின் தொடர்ச்சிக்குச் **சேஷாசலமலை**யென்று பெயர். இது பால்கொண்டா மலையிலிருந்து மேற்றிசையாய்ப் பல்லாரி ஜில்லா வரையிலிருக்கிறது. இவ்விரண்டு மலைகளின் உயரம் 2,000 அடி. இவ்விரண்டுக்கும் பால்கொண்டா சேஷாசல மலைத்தொடரென்னும் ஒரே பெயர் வழங்குகிறது. **பிஞகினி** என்னும் பெயரையுடைய பெண்ணையாறு இந்த ஜில்லாவின் வடபாகத்தில் ஓடுகிறது. இதன் உபநதிகள் **பாபாக்கினி; சித்திராவதி**, செய்யாறு.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் விஸ்தீரணத்துக்குத் தக்கபடி ஜனத்தொகை யில்லை; அது 12,70,000. இத்தொகையில் பெரும்பான்மையோர் இந்துக்கள்; மற்ற ஜனங்கள் மகம்மதியர்கள். இந்த ஜில்லாவில் இந்துக்கள் பேசுவது தெலுங்கு; மகம்மதியர்கள் இந்துஸ்தானி பேசுகிறூர்கள்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:** — சென்னையிலிருந்து பம்பாய்க்குப் போகிற வடமேற்கு இருப்புப்பாதை கடப்பைப் பட்டணத்துக் கிடையில் ஓடுகிறது. வேருெரு இருப்புப்பாதை இந்த ஜில்லாவின் தென்மேற்குப் பாகத்தின் வழியாய்ப் போகிறது. கடப்பையிலிருந்து கர்நூலுக்குப் போகிற கால்வாய் கடப்பைப் பட்டணத்துக்கருகிற் சென்று வடக்கெல்லை வரையில் வடதிசையாய்ப் போகிறது. இக்கால்வாய் கோடை காலத்தில் போக்குவரவுக்கு உபயோகமில்லை.



**விவசாயம், வர்த்தகம்:**—இந்த ஜில்லாவின் பலவிடங்களில் நிலவளம் நேர்த்தியாயிருக்கிறது; இங்குள்ள குடிகள் நல்ல கிருஷிகர்கள். முக்கியமான புன்செய்த் தானியங்கள் சோளம், கம்பு, கேழ்வரகு இவைகளாம். பருத்தி, அவுரி, கரும்பு இவைகளும் விசேஷமாய்ப் பயிரிடுகிறூர்கள்; சர்க்கரையும், நீலமும், வஸ்திரமும் இங்கு செய்யப்படுகின்றன.

**முக்கிய பட்டணங்கள்:**—முக்கிய பட்டணமாகிய **கடப்பை** சென்னை இருப்புப்பாதைக்கருகில் இருக்கிறது. இதில் நீலமும் பஞ்சும் விசேஷமாய் விற்பனையாகின்றன. கடப்பைத் தாலூகாவில் உண்டாகும் அவுரி இந்த இராஜதானியில் விளைகிற அவுரிக்கெல்லாம் மிகவும் நேர்த்தியானதென்று நினைக்கப்படுகிறது. சப்கலெக்டர் வசிக்கும் பிரதான இடமாகிய **மதனபல்லி** இந்த ஜில்லாவின் தென்பாகத்திலுள்ள சுகமான பட்டணம்.

## கர்நூல் ஜில்லா.

**இருக்குமிடம்:**—இந்த ஜில்லாவின் வடக்கில் ஐதராபாத்து, கிழக்கில் நெல்லூர், தெற்கில் கடப்பை, மேற்கில் பல்லாரி. கர்நூலுக்கும் ஐதராபாத்துக்கும் மத்தியில் கிருஷ்ணநதி ஓடுகிறது.

**தோற்றம்:**—இந்த ஜில்லாவின் மத்தியில் தெற்கு வடக்காக இருக்கிற **நல்லமலை, எர்ரமலை** என்னும் இரண்டு மலைத்தொடர்ச்சிகள் இந்த ஜில்லாவை 3 பிரிவுகளாகப் பிரிக்கின்றன. இதன் கிழக்குப் பாகத்திலுள்ள கம்பம் என்னும் பள்ளத்தாக்கில் மிகப் பெரிதான **கம்பம்** ஏரி இருக்கிறது. குண்டலகாமா நதியில் கட்டப்



பட்டிருக்கிற அணையிலிருந்து இந்த ஏரிக்கு ஜலம் சமர்த்தியாய் வருகிறது. மேற்சொல்லிய பள்ளத்தாக்குக்கும் நெல்லூர் ஜில்லாவுக்கும் மத்தியில் கிழக்குத் தொடர்ச்சிமலையின் ஒரு பாகமாகிய வெலிகொண்டா மலையிருக்கிறது. இந்த ஜில்லாவின் மத்தியபாகம் எர்ரமலைக்கும், நல்லமலைக்கும் மத்தியிலிருக்கிறது. இந்த பாகம் கரிசல் பூமியான பெரிய சமவெளி. இதில் நெடுக கர்நூல் கடப்பைக் கால்வாய் வெட்டப்பட்டிருக்கிறது. இங்கு பெய்யும் மழை கூடியமட்டும் போதுமானது. பூமியானது உஷ்ணமாயும், வறட்சியாயு மிருக்கிறது. கோடைகாலத்தில் ஆடுமாடுகள் போதுமான மேய்ச்சல் இல்லாமல் அதிக கஷ்டப்படும். இந்த ஜில்லாவில் மழையே பயிர்களுக்கு ஆதாரமாயிருப்பதால் மாரிகாலத்தில் மழை பெய்யாவிடில் ஜனங்கள் படுந்துன்பம் சொல்லமுடியாது.

**மலை, ஆறு:**—நல்லமலையின் தொடர்ச்சி இந்த ஜில்லாவில் அதிக நீளமுள்ளது. **எர்ரமலை**யானது மேற்குப் புறத்திலுள்ள தாழ்ந்தமலை. கிழக்குத் தொடர்ச்சிமலையின் ஓர்பாகமாகிய **வெலிகோண்டாமலை** சராசரி 2,000 அடி உயரமுள்ளது. இந்த ஜில்லாவின் வட எல்லையில் ஓடுகிற **துங்கபத்திரை**யும், **கிருஷ்ணை**வும், நல்ல மலையில் உற்பத்தியாகி வருகிற **குண்டலகாமா**வும் பிரதான நதிகள். இவ்வாறுகளில், குண்டலகாமா கிருஷ்ணை ஜில்லாவிலும், நெல்லூர் ஜில்லாவிலும் ஓடி வங்கவோலுக்குச் சமீபத்தில் கடலில் சங்கமமாகிறது.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை அதிக குறைவு; அது 8,17,000. இத்தொகையில் அநேகர் இந்துக்கள்; மற்றவர்கள் மகம்மதியர்கள். நல்ல மலையின்மீது **சேன்சூஸ் (Chentsus)** என்னும் ஒரு நாகரீகமற்ற ஜாதியார் வசிக்கிறார்கள். இந்த ஜில்லாவில் தெலுங்கு பாஷை வழங்குகிறது.

**விவசாயம்:** — இந்த ஜில்லாவில் நன்செய் சாகுபடி மிகவும் சொற்பம்; சோளம் ஒன்றுதான் முக்கியமான





SRI SAILAM TEMPLE.—ஸ்ரீ சைலம் கோவில்.



புன்செய்ப் பயிர். அவுரியும், பருத்தியும் விசேஷமாய்ப் பயிரிடப்படுகின்றன; வஸ்திரம் நெய்வதுதான் முக்கியமான கைத்தொழில்.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:** — மேற்குக் கடற்கரையில் மார்மகோவாவிலிருந்து கிழக்குக் கடற்கரையில் பெஜவாடாவுக்குப் போகிற இருப்புப்பாதை இந்த ஜில்லாவின் வழியாக கீழ்த்திசையாகப் போகிறது. சென்னையிலிருந்து பம்பாய்க்குப் போகிற இருப்புப் பாதை தென்மேற்கு மூலையில் போகிறது. கர்நூல் கடப்பைக் கால்வாய் இந்த ஜில்லாவின் மத்தியிலுள்ள பள்ளத்தாக்கில் நெடுகப் போகிறது.

**முக்கியபட்டணங்கள்:**—இந்த ஜில்லாவின் முக்கிய பட்டணம் **கர்நூல்**; இங்குள்ள ஜனங்களில் பாதிப்பேர் மகம்மதியர்கள். இருப்புப்பாதைக்குப் பக்கத்திலுள்ள **கம்பம்** பட்டணத்திற்கருகில் ஒரு மகா பெரிய ஏரி இருக்கிறது. இந்த ஏரிக்கு குண்டலகாமா நதியில் 60 அடி உயரமுள்ள அணையிலிருந்து ஜலம் வருகிறது. இருப்புப்பாதைக்கருகிலுள்ள **நந்தியால்**, ஹெட் அஸிஸ்டாண்ட் கலெக்டர் வசிக்கும் செழிப்பான பட்டணம்.

## நீலகிரி ஜில்லா.

**இருக்குமிடம்:** — இந்த இராஜதானியிலுள்ள ஜில்லாக்களிலெல்லாம் அதிக சிறிது நீலகிரி ஜில்லா. இதன் எல்லைகளாவன: வடக்கே மைசூர், கிழக்கே கோயம்புத்தூர், தெற்கே மலையாளமும் கோயம்புத்தூரும், மேற்கே மலையாளம்.

**தோற்றம்:**—நீலகிரி ஜில்லாவை மேற்குமலையின் உச்சியிலுள்ள ஒரு சிறு பீடபூமி என்னலாம்; இதன் உயரம் சராசரி 6,000 அடி. இந்த ஜில்லாவின் மத்தியில் 7,200 அடி உயரமுள்ள உதகமண்டலத்தில் இரண்டு மைல் நீளமுள்ள ஒரு சிறு ஏரி இருக்கிறது. இங்கு





OOTACAMUND SHOWING ELK HILL.—உதகமண்டலத்திலுள்ள எல்க் குன்று.



பூமியானது ஐரோப்பியர்களுக்கு அதிக தேக சௌக்கியமுள்ளது; இவ்விடத்தில் போதுமான மழை பெய்யும்.

**மலை, ஆறு:**—இந்த ஜில்லாவில் உன்னதமான பல சிகரங்கள் உண்டு. இவைகளில் முக்கியமானது **தோட்டபெட்டா**, அதன் உயரம் 8,728 அடி. தென்மேற்குப் பாகத்தில் **குண்டா** (Kunda) என்னும் ஒரு மலை வரிசை இருக்கிறது. இதில் **மாயாறு** உற்பத்தியாகி வடக்காக ஓடி காவேரியின் உபநதியாகிய பவானியில் கலக்கிறது. **வேப்பூர்** என்னும் நதியும் குண்டா மலைத்தொடரில் உற்பத்தியாகி மலையாளம் ஜில்லா வழியாய் மேற்காக ஓடுகிறது.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 1,00,000. இத்தொகையில் அதிகமான ஜனங்கள் இந்துக்கள்; மற்றவர்கள் விசேஷமாய் கிறிஸ்தவர்கள்; சில மகம்மதியர்களுமுண்டு. கிறிஸ்தவர்களில் மூன்றிலொருபாகம் ஐரோப்பியரும், யூரேஷியர்களும்; மற்றிரண்டு பாகம் ஜனங்கள் சுதேச கிறிஸ்தவர்கள். அநேக ஐரோப்பிய கிருஷிகர்கள் இங்கு நிலையாக வசித்துக்கொண்டு காப்பிச்செடியும், தேயிலைச்செடியும் பயிர் செய்கிறார்கள். உதகமண்டலம் வருஷத்தில் பல மாதங்களில் சென்னை துரைத்தனத்தார்கள் வசிக்கும் பிரதான ஸ்தானமாயிருக்கிறது. இக்காரணத்தினால் இங்கு வசிக்கும் ஐரோப்பியர் தொகை அதிகமாயிருக்கிறது.

**விவசாயம்:**—இங்கே உள்ள முக்கியமான விளைபொருள்கள் காப்பிச்செடி, தேயிலை, சின்கோனா. இம்மூன்றும் முக்கியமாய் ஐரோப்பிய கிருஷிகர்களால் பயிரிடப்படுகின்றன. இங்கிலாந்து தேசத்திய பழவர்க்கங்களும், உருளைக்கிழங்கும் இங்கே வெகு செழிப்பாய் உண்டாகின்றன.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**— சென்னப்பட்டணத்தினின்று கள்ளிக்கோட்டைக்குப் போகும் இருப்



புப் பாதையினின்று ஒரு கிளை மேட்டுப்பாளையத்தினின்று நீலகிரிமலை அடிவாரத்துக்குப் போகின்றது.

**முக்கிய பட்டணங்கள்:** — இந்த ஜில்லாவின் முக்கிய பட்டணம் **உதகமண்டலம்** இது சென்னை இராஜதானியில் தேகசௌக்கியத்துக்கு மிகச் சிறந்த ஸ்தலமாயும் சென்னை துரைத்தனத்தார்கள் உஷ்ணகாலத்தில் வசிக்குமிடமாயு மிருக்கிறது. இது சமுத்திரமட்டத்துக்கு மேல் 7,200 அடி உயரமுள்ளது; இது மேட்டுப்பாளையம் இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 32 மைல் தூரத்திலிருக்கிறது. நீலகிரி பீடபூமியின் தென்கிழக்கு மூலையிலிருக்கும் **குன்னூ**ரானது 6,000 அடி உயரத்திலுள்ள சௌக்கியமான பட்டணம். இது உதகமண்டலத்துக்கு 12 மைல் தூரமுள்ளது.

## கோயம்புத்தூர் ஜில்லா.

**இருக்குமிடம்:**—இந்த ஜில்லாவின் எல்லைகளாவன. வடக்கே மைசூர்; கிழக்கே சேலம்; மேற்கே நீலகிரியும் மலையாளமும்; தெற்கே மதுரையும் திருவனந்தபுரமும்.

**தோற்றம்:**—இந்த ஜில்லாவின் வடபாகம் மைசூரிலிருந்து பிளிகிரி ரங்கன் மலைத்தொடர்ச்சியினால் பிரிக்கப்பட்ட ஒரு உயர்ந்த பீடபூமி; இந்தப்பாகம் எல்லாம் மலைப்பிரதேசம். இது தென்பாகத்திலுள்ள சமவெளிக்கு மேல் 2,500 அடி உயர்ந்தது. இந்த ஜில்லாவில் பாதி பாகத்தில் தேக்கு, செம்மரம், சந்தனமரம் முதலிய விலையுயர்ந்த மரங்களுண்டாகும் காடுகள் மிகுதி. கோடைமழைக் காலத்தில் பாலக்காட்டுக் கணவாய்வழியாய் மேற்குக் கடற்கரையிலிருந்து மழையில்லாத குளிர்ந்த காற்று இந்த ஜில்லாவில் இடைவிடாமல் அடித்துக்கொண்டிருக்கிறது. காய்ச்சல் உண்டாகும் மலையடிவாரத்தைத் தவிர மற்றெங்கும் பூமியானது தேகசௌக்கியமுள்ளது.



**மலை, ஆறு:**—நீலகிரிமலை இந்த ஜில்லாவின் வடமேற் கெல்லையாகவும், ஆனைமலை தென்மேற் கெல்லையாகவு மிருக்கின்றன. கோயம்புத்தூருக்கும் மைசூருக்கும் மத்தியில் 11 மைல் விஸ்தாரமுள்ள பிளிகிரி ரங்கன்மலை யிருக்கிறது. இம்மலை கிழக்குத் தொடர்ச்சி மலையின் தென் கோடியாக விருக்கிறது. இந்த ஜில்லாவின் வடக் கிலும் கிழக்கிலும் நெடுக காவேரியாறு ஓடி சேலம் ஜில் லாவிலிருந்து இந்த ஜில்லாவைப் பிரிக்கிறது. இந்த ஆற்றில் கலக்கிற உபநதிகள் மூன்று. அவை (1) பவானி, (2) நொய்யலாறு, (3) அமராவதி.

**ஜனத்தோகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத் தொகை 20,00,000; இதில் ஏறக்குறைய எல்லா ஜனங் களும் இந்துக்கள். இந்த ஜில்லாவின் வடபாகத்தில் கன் னடமும், மற்றவிடங்களில் தமிழும் வழங்குகின்றன; தெலுங்கு பாஷையும் அநேக கிராமங்களில் பேசப்படு கின்றது.

**விவசாயம், வர்த்தகம்:**—இந்த ஜில்லாவில் பிரதான விளைபொருள்கள் சோளமும், கம்பும்; இவைதவிர பருத்தியும், கேழ்வரகும், கொள்ளும் விசேஷமாய் விளைகின்றன. நெல் சொற்பமாய் உண்டாகின்றது. முக் கியமான கைத்தொழில் நெசவு; முக்கியமான ஏற்று மதிச்சரக்கு பருத்தி.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னப்பட்ட ணத்திலிருந்து கள்ளிக்கோட்டைக்குப் போகிற இருப் புப்பாதை இந்த ஜில்லாவின் மத்தியில் போகிறது. இப் பாதையினின்று ஒரு கிளை நீலகிரிமலை அடிவாரத்துக் குப் போகிறது. ஈரோட்டிலிருந்து திரிச்சிராப்பள்ளிக் குப் போகிற தென்னிந்தியா இருப்புப்பாதை கரூர் மார்க்கமாய் தென்கிழக்காகப் போகிறது.

**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லாவின் பிரதான பட்டணமாகிய **கோயம்புத்தூர்**தேகத்துக்கு அதிகசௌக்





RIVER BHOWANI, METTUPALAIYAM.—பவானியாறு.



கியமுள்ளது. சென்னை இருப்புப்பாதையும் தென்னிந்தியா இருப்புப்பாதையும் சேருகிற இடத்திலுள்ள ஈரோடு மிகுதியாய் வியாபாரம் நடக்கிற ஒரு பெரிய பட்டணம்.

## சேலம் ஜில்லா.

**இருக்குமிடம்:**—இந்த ஜில்லாவின் நான்கெல்லைகளாவன: வடக்கே மைசூரும் வடஆற்காடும், கிழக்கே திரிச்சிராப்பள்ளியும் வடஆற்காடும் தென்ஆற்காடும், தெற்கே திரிச்சிராப்பள்ளியும் கோயம்புத்தூரும், மேற்கே கோயம்புத்தூரும் மைசூரும்.

**தோற்றம்:**—இந்த ஜில்லாவின் வடபாகம் மைசூர் பீடபூமியைச் சேர்ந்தது; தென்பாகம் கர்னாடக சமவெளியைப்போலுள்ளது. இந்த ஜில்லாவின் மூன்றிலொரு பாகமானது காடடர்ந்த பூமி. இங்கு அகப்படும் இரும்பினால் வெகு நேர்த்தியான எஃகு செய்யப்படுகிறது. வருஷத்தில் பெய்யும் மழை கொஞ்சம் சுமாரானது. பீடபூமியைச் சேர்ந்த நாடு தேகத்துக்குச் சௌக்கியமானது. தாழ்ந்த மலைப்பிரதேசத்தில் காய்ச்சல் உண்டாகும்.

**மலை, ஆறு:**—இந்த ஜில்லாவின் வடபாகத்திலும், மத்தியிலும் தாழ்ந்த மலைகள் பரவியிருக்கின்றன. இவைகளில் பிரதானமானவை **சேர்வராயன், காளேரி, பச்சை மலை, ஜவ்வாது** என்னும் மலைகள். சேர்வராயன் இந்த ஜில்லாவின் மத்தியிலுள்ள மலைத்தொடர்ச்சி; இதன் பெரிய சிகரம் 5,400 அடி உயரமுள்ளது. இச்சிகரத்திலிருக்கும் பிரதான பட்டணமாகிய **ஏர்க்காடு** ஐரோப்பியர்கள் சௌக்கியத்துக்காக வசிக்குமிடம். இது சேலத்திலிருந்து 10 மைல் தூரத்திலிருக்கிறது. இம்மலைத்தொடர்ச்சியில் காப்பிச்செடி அதிகமாய் உண்டாகிறது; இந்த ஜில்லாவின் தென்கிழக்கிலுள்ள காளேரி 3,000 முதல் 4,000 அடிவரையில் உயர்ந்திருக்கிறது. பச்சைமலை இந்த ஜில்லாவின் தெற்கிலும் திரிச்சிராப்பள்ளியின் எல்லைக்கருகிலும் 20 மைல் தூரம் நீண்டிருக்கும் தாழ்ந்த



மலைத்தொடர்ச்சி. இது 2,000 முதல் 3,000 அடிவரையில் உயர்ந்தது. ஜவ்வாதுமலை இந்த ஜில்லாவின் வடகிழக்கிலுள்ளது; இதன் உயரம் 3,000 அடி. இந்த ஜில்லாவின் பிரதான நதியாகிய **காவேரி** இதற்கும் கோயம்புத்தூருக்கும் இடையில் ஓடுகிறது. மைசூரில் உற்பத்தியாகிவருகிற **பெண்ணையாறு** இந்த ஜில்லாவின் வடபாகத்தில் நெடுகச் சென்று கிழக்காகத் தென்னாற்காட்டில் பிரவேசிக்கிறது.

**ஜனத்தோகை, பாஷை:**—இந்த ஜில்லாவின் ஜனத்தொகை 19,60,000; இதில் முக்கியமான ஜனங்கள் இந்துக்கள். சொற்ப மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களுமுண்டு. இந்த ஜில்லாவில் வழங்கும் பாஷை தமிழ். ஆனால் வடக்கே ஓசூர் தாலூகாவில் பெரும்பான்மையோர் கன்னடம் பேசுகிறார்கள்.

**போக்குவரவுக்குரியசாதனங்கள்:**—சென்னை இருப்புப்பாதை இந்த ஜில்லாவின் மத்தியில் போகிறது; ஜோலார்பேட்டையிலிருந்து ஒரு கிளைப்பாதை பெங்களூருக்குப் போகிறது; இந்த ஜில்லாவெங்கும் நல்ல சாலைகளுமுண்டு.

**விவசாயம், வர்த்தகம்:**—நெல்லும், கீழ்ஜாதியார்கள் புசிக்கும் கேழ்வரகும் பிரதான விளைபொருள்கள். கம்பு, கொள்ளு, பயறுகள், ஆமணக்கு, எள்ளு இவைகளும் விளைவதுண்டு. ஒவ்வொரு முக்கிய பட்டணத்திலும் கிராமத்திலும் நெசவு விசேஷ கைத்தொழில். சிறந்த சமுக்காளம் சேலம் சிறைச்சாலையில் செய்யப்படுகிறது. இப்பட்டணத்தில் செய்யப்படும் வெட்டுக்கருவிகள் தென்னிந்தியாவில் மிக் சிரேஷ்டமானவை.

**முக்கிய பட்டணங்கள்:**—இந்த ஜில்லாவின் பிரதான பட்டணமாகிய **சேலம்**, இருப்புப்பாதைக் கருகிலும் சேர்வராயன் மலை அடிவாரத்துக்கு 6 மைல்



தூரத்திலுமிருக்கிறது. இங்கு நெசவுத்தொழில் மிருதியாய் நடக்கிறது. இருப்புப்பாதைக்குச் சமீபத்திலுள்ள **திருப்பத்தூர்** ஹெட் அசிஸ்டாண்டு கலெக்டர் வசிக்கின்ற ஒரு பெரிய பட்டணம். இதில் தானியங்களும், தோலும் மிருதியாய் வியாபாரமாகின்றன. இந்த ஜில்லாவின் வடக்கேயுள்ள **ஒசூர்** ஸப் கலெக்டருடைய டிவிஷனில் பிரதான ஸ்தானம்.

## 4-வது. அத்தியாயம்.

### சென்னை இராஜதானியைச்சேர்ந்த

### சுதேச சமஸ்தானங்கள்.

#### 1. திருவாங்கூர் இராஜ்யம்.

**இருக்குமிடம்,** பரப்பு:—இச்சுதேச சமஸ்தானம் இந்த இராஜதானியின் தென்மேற்கு மூலையில் மேற்குத் தொடர்ச்சிமலைக்கும் கடலுக்கும் நடுவிலிருக்கிறது. இயற்கையாய் இந்த இராஜ்யம் பெரும்பாலும் மலையாள ஜில்லாவை யொத்திருக்கிறது. இதன் அதிக நீளம் 175 மைல், அதிக அகலம் 75 மைல்.

**தோற்றம்:**—கடற்கரையிலுள்ள பூமியானது வெகுவாய்ச் சமமாயிருக்கிறது. இங்கு ஏறக்குறைய 10 மைல் தூரம் வரையில் தென்னமரங்களும் பாக்குமரங்களும் அடர்ந்திருக்கின்றன. இம்மரங்கள் இந்த நாட்டிலுள்ளவர்களின் தனத்துக்கு ஓர் பிரதான ஆதாரம். கிழக்குப் பாகத்தில் மேற்குத்தொடர்ச்சி மலையடிவாரம் வரையில் பூமியானது வரவர, மேட்டுப்பாங்காயும் காடடர்ந்த குன்றுகளும் பள்ளத்தாக்குகளு முள்ளதாயுமிருக்கிறது. திருவனந்தபுரத்திலிருந்து வடக்கே கொச்சி இராஜ்யத்தின் எல்லைவரையில் கடற்கரையில் நெடுக ஒரு கழி இருக்கிறது. இயற்கையாயுள்ள பல கழிகளையும் ஏரிகளையும் பற்பல விடங்களில் கால்வாய்கள் தோண்டி



ஒன்றாகச் சேர்த்து இந்தத் தொடர்ச்சியான கழியை உண்டாக்கியிருக்கிறார்கள்.

**மலை, ஆறு:**—மேற்குத் தொடர்ச்சி மலையின் வடக்கிலுள்ள **ஆனைமலை**யும் தெற்கிலுள்ள **ஏலக்காய்மலை**யும் முக்கியமானவை. ஆனைமலையில் உன்னதமான சிகரம் 8,800 அடி உயரமுள்ள **ஆனைமுடி**. இது இமயமலைக்குத் தெற்கிலுள்ள மலைகளில் உன்னதமான சிகரம். தென்பாகத்தில் **அகஸ்தியமலை**யானது 6,200 அடி உயரமுள்ள பெரிய சிகரம். இது இந்துக்களுடைய புண்ணிய ஸ்தலம்; இங்குதான் தாம்பிரபரணி நதி உற்பத்தியாகிறது. முக்கியமான நதியாகிய **பெரியாறு** மேற்குத் தொடர்ச்சிமலையில் உற்பத்தியாகி 142 மைல் ஓடி கடலில் சங்கமமாகிறது. திருவாங்கூர் மலையில் யானை வெகு அதிகம்; அதின் தந்தமானது இந்த இராஜாங்கத்தின் வரும்படிக்கு ஒரு ஆதாரமாயிருக்கிறது. கடற்கரையில் சிலகாலத்தில் உஷ்ணமும் சிலகாலத்தில் சீதமும் அதிகரித்திருக்கும். மலையின்மீது குளிர் மிருதி. மழை எங்கும் சமர்த்தியாய்ப் பெய்கிறது.

**ஜனத்தொகை. பாஷை:**—ஜனத்தொகை 25,00,000. இத்தொகையில் முக்கால் பாகம் ஜனங்கள் இந்துக்கள், மற்ற ஜனங்கள் மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களுமாம். மகம்மதியர்கள் மலையாள பாஷை பேசுகின்ற மாப்பிள்ளைமார்கள். சென்னை இராஜதானியில் மற்றெங்கிலும்விட இங்குள்ள கிறிஸ்தவர்களின் தொகை வெகு அதிகம். இவர்களின் ஜனசங்கியை 5 லட்சம். தாழ்ந்த ஜாதியார்களாகிய சாணார்கள் தென்னையையும் பனையையும் பயிராக்கி ஜீவிக்கிறார்கள். இங்குள்ள நம்பூரிகள் என்னும் பிராமணர்களும் நாயர்மார்களும் மலையாள ஜில்லாவிலுள்ள இச்சாதியார்களை நடை, உடை, பாவனைகளில் ஒத்திருக்கிறார்கள். ஜனசங்கியையில் 5-ல் 4 பாகம் ஜனங்கள் மலையாளமும் மற்றவர்கள் தமிழும் பேசுகிறார்கள்.



**விவசாயம், வர்த்தகம்:**—முக்கியமான விளைபொருள் நெல்லும் தென்னையும்; மிளகு, பாக்கு, பலாமரம் இவைகளும் பயிரிடப்படுகின்றன. மிளகுக் கொடியைப் பலாமரத்திலும் மற்ற மரங்களிலும் படரும்படி விடுகிறார்கள். பலாப்பழம் கீழ்ச்சாதியார்களின் ஆகாரமாகிறது, பலாமரம் வீடு முதலிய கட்டடங்களுக்கு உபயோகப்படுகிறது. மலையில் ஏலக்காய் ஏராளமாய் உண்டாகிறது; இங்கு காப்பிச்செடியும் பயிராக்குகிறார்கள். மேற்சொல்லிய பொருள்களில் நெல் நீங்கலாக மற்றவைகளும் உப்பிட்ட மீனும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

**இராஜாங்கம்:**—இந்த ராஜ்யம் ஒரு மகா இராஜாவினால் ஆளப்படுகிறது. இவர் இங்கிலீஷ் துரைத்தனத்தாருக்கு வருஷந்தோறும் சில தொகை கப்பம் கட்டுகிறார். இவருக்கு உதவியாக திவான் என்னும் பட்டப்பெருடைய ஒரு மந்திரி நியமிக்கப்பட்டிருக்கிறார். அரசாளும் முறைமையில் இந்த இராஜ்யம் இங்கிலீஷ் துரைத்தனத்தைப் பெரும்பாலும் ஒத்திருக்கிறது. இந்த நாடு 31 தாலூகாக்களாக வகுக்கப்பட்டு ஒவ்வொரு தாலூகாவுக்கும் தாசீல்தார் என்னும் அதிகாரி நியமிக்கப்பட்டிருக்கிறார்.

**முக்கிய பட்டணங்கள்:** — இராஜதானியாகிய **திருவனந்தபுரம்** மஹா ராஜாவும் பிரிட்டிஷ் ரெசிடெண்டும் வசிக்குமிடம். **கோல்லம்** புராதனமான சிறந்த துறைமுகப்பட்டணம். இங்கு இராணுவமிருக்கிறது. இந்த நாட்டில் இரண்டாவது பட்டணமாகிய **ஆலப்பிழை** முக்கியமான துறைமுகம். இது கொச்சிக்குத் தெற்கே :: மைல் தூரத்திலிருக்கிறது.

## 2. கோச்சி இராஜ்யம்.

**இருக்குமிடம்:** — இவ்விராஜ்யம் திருவாங்கூருக்கும் மலையாளத்திற்கும் மத்தியிலிருக்கிறது. மலையாள ஜில்லாவைச் சேர்ந்த நீண்ட அகலமற்ற ஒரு பாகமானது இந்த நாட்டுக்கும் கடலுக்கு மிடையில் இருக்கிறது.



**தோற்றம்:**—இந்த நாட்டின் இயற்கையமைப்பு மலையாளம் திருவாங்கூர் இவைகளின் அமைப்பை யொத்திருக்கிறது. மேற்குத் தொடர்ச்சிமலையின் மேற்சரிவும் இம்மலைக்கும் கடலுக்கும் மத்தியிலுள்ள நாடும் இந்த இராஜ்யத்தில் அடங்கியிருக்கின்றன. கடலோரத்தில் ஆழமில்லாத கழிகளின் தொடர்ச்சி நெடுக இருக்கின்றது. தாழ்ந்த பூமியிலெங்கும் நெற்பயிரும் தென்னமரமும் ஏராளமா யுண்டு. வருஷந்தோறும் அளவு கடந்த மழைபெய்கிறது.

**மலை, ஆறு:** — மேற்குத் தொடர்ச்சிமலையின் ஒரு பாகமாகிய **ஆனைமலை** இங்குள்ளது. வடக்கில் **பொன்னனியும்**, தெற்கில் **பெரியாறும்** முக்கிய நதிகள்.

**ஜனத்தொகை, பாஷை:** — ஜனத்தொகை மொத்தம் 7,15,000. இதில் முக்கால்பங்கு ஜனங்கள் இந்துக்கள்; மற்ற ஜனங்கள் கிறிஸ்தவர்களும் சொற்ப மகம்மதியர்களுமாம். சென்னை இராஜதானியின் எந்த ஜில்லாவிலாவது அல்லது சுதேச ராஜ்யத்திலாவது உள்ள கிறிஸ்தவர்களிலும் இங்குள்ள இச்சமையத்தாரின் தொகை மிகுதி. இங்கு வழங்கும் பாஷை மலையாளம்; கிழக்குப் பாகங்களிலிருந்து வந்து இங்கு குடியேறியவர்கள் தமிழ் பேசுகிறார்கள்.

**விவசாயம், வர்த்தகம்:**—முக்கியமான விளைபொருள் நெல்; இங்குண்டாகும் தென்னமரத்தை இரண்டாவது விளைபொருளாய்ச் சொல்லலாம். இது கடற்கரையிலெங்கும் விசேஷமாயுண்டு. மற்ற விளைபொருள்கள் காப்பிக்கொட்டை, அவுரிச்செடி, பருத்தி, வெற்றிலை, பாக்கு, இஞ்சி, மிளகு இவைகளாம். ஏற்றுமதிச் சரக்குகளில் முதன்மையானது நெல். மற்றவைகள் தேங்காயெண்ணெய், தேங்காய், கயிறு, கொப்பரைத் தேங்காய் இவைகளாகிய தென்னமரத்தின் பலன்களும், மிளகும், ஏலக்காயும், இஞ்சியுமாம்.





**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னையிலிருந்து கள்ளிக்கோட்டைக்குப் போகிற இருப்புப்பாதை இந்த இராஜ்யத்தின் வடக்கெல்லையில் **சோரனூருக்குச்** சமீபத்தில் போகிறது. இங்கிருந்து ஒரு தனி கிளைப்பாதை கொச்சி இராஜ்யத்திற்குள் போடப்பட்டிருக்கின்றது. இங்கு கழிகளின் வழியாயும் கால்வாயின் வழியாயும் பிரயாணம்செய்வது வழக்கம்.

**அரசாட்சி:** — இந்த இராஜ்யத்தின் தலைவர் ஒரு இராஜா; அவர் தனக்குதவியாக ஒரு திவானை நியமித்துப் பெரும்பாலும் இங்கிலீஷ் துரைத்தனத்தைப்போலவே அரசாட்சி நடத்திவருகிறார்.

**முக்கிய பட்டணங்கள்:** — இந்த நாட்டின் இராஜதானியாகிய **எறணுகுளம்** விசேஷமான பட்டணம். இதற்கு முந்தி இராஜதானியாயிருந்த **கோச்சிப்பட்டணம்** பிரிட்டிஷ் கொச்சிக்கு அருகிலிருக்கிறது; வடபாகத்திலுள்ள பெரிய பட்டணம் **திருச்சூர்**. இதற்கும் கொச்சிக்கும் கால்வாய் வழியாய் வியாபாரம் நடக்கிறது.

## 5—வது. அத்தியாயம்.

### இந்தியா கவரன்மெண்டாருக்குட்பட்ட

### சுதேச சமஸ்தானங்கள்.

#### 1. நிஜாம் இராஜ்யம்.

**இருக்குமிடம், பரப்பு:**—**ஐதராபாத்து** என்னும் பெயரையுடைய இந்த இராஜ்யம் சுதேச இராஜ்யங்களிலெல்லாம் அதிக பெரிது. இதுவும் பீரார் மாகாணமும் தென்னிந்தியாவின் மத்தியிலிருக்கின்றன. இதன் வடமேற்கில் அஜண்டா என்னும் மலையும், இந்த இராஜ்யத்துக்கும பம்பாய்க்கும் மத்தியிலோடுகிற தபதிநதியும் இருக்கின்றன. வடகிழக்கிலும் கிழக்கிலும் கோதாவரி நதி மத்திய மாகாணங்களுக்கும் இதற்கும் எல்லையாக



அமைந்திருக்கிறது. தெற்கில் கிருஷ்ணாநதி சென்னை இராஜதானிக்கும் இதற்கும் எல்லையாகப் பாய்கிறது. பம்பாய் இராஜதானி இதன் மேற்கெல்லை. இதன் பரப்பு 80,000 சதுரமைல்; பீரார் மாகாணத்தின் விஸ்தீரணம் 18,000 சதுரமைல்; ஆக இவ்விரண்டு நாடுகளின் பரப்பு 98,000 சதுரமைல். இவ்விரண்டுக்கும் மத்தியில் ஓடுகிற நதி கோதாவரிநதியின் உபநதியாகிய பெயின்கங்கை.

**தோற்றம்:**—இந்த இராஜ்யம் தக்ஷிண பீடபூமியின் வடபாகமாக அமைந்திருக்கிறது. இதன் சராசரி உயரம் சமுத்திர மட்டத்திற்குமேல் 1,250 அடி. கிருஷ்ணாநதியும், கோதாவரிநதியும் அவைகளின் உபநதிகளுடன் இந்த இராஜ்யத்தில் நெடுகப் பாய்கின்றன. மேற்குப்பாகத்தில் இந்த நாடானது சமவெளியான கரிசல் பூமியாயிருக்கிறது; இங்கு ஒவ்வோரிடத்தில் தாழ்ந்த மலைத்தொடர்ச்சிகளுண்டு. கிழக்குப் பாகமெல்லாம் அங்குமிங்கும் மலைக் குன்றுகளுள்ள கற்பாறையான சமவெளி. 18,000க்கு அதிகமான ஏரிகளுண்டு; இவைகள் பெரும்பாலும் முன்னாண்ட இந்து அரசர்களால் வெட்டப்பட்டன. பூமியானது வறட்சியா யிருந்தபோதிலும் பொதுவாய் தேகத்திற்கு ஆரோக்கியமா யிருக்கிறது; வருஷந்தோறும் பெய்யும் மழை சொற்பந்தான்.

**மலை, ஆறு:**—**அஜண்டா** அல்லது **இந்தியாத்திரி** மலைத்தொடர்ச்சி மேற்குத் தொடர்ச்சிமலையின் ஓர் கிளை; இது வடமேற்கில் நெடுக விருக்கிறது. இதன் தொடர்ச்சியாகிய **சாத்மாலாமலை** பீராரின் மத்தியிலிருக்கிறது. இவைகளின்சராசரிஉயரம் 2,000 அடி. பௌத்த சமயத்தாரின் புராதன ஆலயங்கள் அஜண்டாமலையிலுள்ள அற்புதமான குகையிலுள்ளவைகள். இந்த நாட்டின் வடக்கிலும் மத்தியிலும் **கோதாவரி** ஆறும், தெற்கில் **கிருஷ்ணா**நதியும், அதன் உபநதிகளும் பாய்கின்றன.

**ஜனத்தோகை, பாஷை:** — நிஜாம் இராஜ்யத்தின் ஜனத்தொகை 1,15,00,000. இதில் பத்திலொரு பாகம்



ஜனங்கள் மகம்மதியர்கள்; மற்றவர்கள் இந்துக்கள். மகம்மதியர்கள் பேசுவது இந்துஸ்தானி. இந்துக்களில் தென்கிழக்கிலுள்ளவர்கள் தெலுங்கும், தென்மேற்கிலுள்ளவர்கள் கன்னடமும், வடக்கிலும் மேற்கிலுமுள்ளவர்கள் மகாராஷ்டிரமும் பேசுகிறார்கள். இச்சாதியார்கள் தவிர அநேக பார்சிகளும், சீக்கியர்களும், அரபியர்களும், ரோஹிலர்களும், பூர்வமாயுள்ள ஜாதியார்களும் இங்குண்டு.

**விவசாயம், வர்த்தகம்:**—இந்த இராஜ்யத்தின் நிலவளம் பெரும்பாலும் செழிப்பாயிருக்கிறது. நெல், கோதுமை, சோளம், கேழ்வரகு, ஆமணக்கு, எள்ளு, கொள்ளு இவைகள் விசேஷமாய்ப் பயிரிடப்படுகின்றன. மேற்குப் பிரதேசத்தில் பருத்தி அதிகமாய் உண்டாகிறது. மாம்பழம், சீத்தாப்பழம் முதலிய பழவகைகள் அதிகமாய் விளைகின்றன. வெள்ளரி, அன்னாசிப்பழம், கொடிமுந்திரிப்பழம் இவைகளுக்காக ஐதராபாத்து சிறந்தது. பருத்தி, ஆமணக்கு, எள்ளு, தோல், செப்புப் பாத்திரங்கள் இவைகள் ஏற்றுமதியாகின்றன. இறக்குமதிச் சரக்குகள் உப்பு, தானியம், மரம், ஐரோப்பாவில் செய்யப்படும் பலவகைச் சாமான்கள். தென்கிழக்கிலுள்ள **சிங்கரேணி**யில் நிலக்கரியுள்ள பூமி கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:**—சென்னையிலிருந்து பம்பாய்க்குப் போகிற இருப்புப்பாதை ஐதராபாத்தின் தென்மேற்குத்திசையில் போகிறது. ரேச்சூருக்கு வடக்கேயுள்ள **வாடி**யென்னும் இடத்திலிருந்து ஒரு கிளை இருப்புப்பாதை ஐதராபாத்துக்குப் போகிறது. இப்பாதை சென்னை இராஜதானியில் கீழ்த்திசையாய்ச் சென்று பெஜவாடாவில் முடிகிறது. 10 மைல் நீளமுள்ள ஒரு கிளைப்பாதை சிங்கரேணியில் நிலக்கரிச் சுரங்கம்வரையில் போடப்பட்டிருக்கிறது.

**அரசாட்சி:**—இந்த இராஜ்யத்தின் அதிபதி **நிஜாம்** என்னும் பட்டப்பேரை யுடையவர். இவர் இந்தியாவில் முதன்மையான மகம்மதிய அரசர். **பீரார்** மாகாணம் ஐதராபாத்திலுள்ள பிரிட்டிஷ் ரெசிடெண்டு என்னும் ஐரோப்பிய உத்தியோகஸ்தரால் ஆளப்படுகிறது. இந்த மாகாணத்தின் சர்க்கார் வரும்படியில் அரசாட்சிக்கு வேண்டிய பணம் செலவானதுபோக பாக்கித் தொகை நிஜாமுக்குச் செலுத்தப்படுகிறது. இந்த இராஜ்யத்தின் பாதுகாப்புக்காக ஒரு பெரிய சேனை நிஜாமினால் ஆதரிக்கப்படுகிறது.



**முக்கிய பட்டணங்கள்:**—நிஜாம்இராஜ்யத்தின்இராஜதானி **ஐதராபாத்து**. இது கிருஷ்ணாநதியின் ஒரு கிளையாகிய **மூசி** ஆற்றோரத்தில் கட்டப்பட்ட ஓர் பெரிய நகரம். இங்கு நிஜாமும் பிரிட்டிஷ் ரெசிடெண்டும் வசிக்கிறார்கள். **சிக்கந்தராபாத்து** என்பது இந்தியாவில் இங்கிலீஷ் ராணுவ ஸ்தலங்களிலெல்லாம் அதிக பெரிது. பூர்வீக இராஜதானியாகிய **கோலகோண்டா** என்னுமிடத்தில் நிஜாமுடைய பொக்கிஷமும் இந்த இராஜ்யத்தின் சிறைச்சாலையும் இருக்கின்றன. இவ்வூரின் இரத்தினங்கள் உலகமெங்கும் பிரசித்தமானவைகள். **தௌலதாபாத்து** என்பது டில்லி நகரத்திற்குப் பதிலாக இராஜதானியாக்கவேண்டுமென்று மகம்மது டோக்ளாக்கினால் கட்டப்பட்ட பட்டணம். இதற்குத் **தேவகிரி** என்றும் பேர். வடமேற்கு மூலையில் **அஸ்ஸே** என்னும் கிராமத்திற்கு அருகில் 1803-ம் வருஷத்தில் சர் ஆர்தர் வெல்லஸ்லி என்னும் இங்கிலீஷ் தளகர்த்தர் 5,000 யுத்தவீரர்களைக்கொண்டு 50,000 போர்ச் சேவகர்களடங்கிய மகாராஷ்டிர இராணுவத்தை முறியடித்தார்.

### 2. பீரார்.

**இருக்குமிடம்,** பரப்பு:—மத்திய இந்தியாவிலுள்ள பீரார் மாகாணத்தை ஐதராபாத்திலிருக்கும் பிரிட்டிஷ் ரெசிடெண்டா யிருக்கிறவர் பீராரின் சீப் கமிஷனர் (Chief Commissioner) என்னும் உத்தியோகப் பேர்



பெற்று ஆண்டுவருகிறார். இது மத்திய மாகாணங்களுக்கும் ஐதராபாத்துக்கும் இடையிலிருக்கிறது.

**தோற்றம்:**—வடக்கில் சாத்புராமலைக்கும் தெற்கில் சாத்மாலாமலைக்கும் மத்தியில் இம்மாகாணம் கிழக்கு மேற்காய் பரவியிருக்கும் விசாலமான பள்ளத்தாக்கு. இந்த பள்ளத்தாக்கில் நெடுக தபதியின் கிளையாகிய பூர்ணாநதி பாய்கிறது. இங்கு பூமியானது செழிப்பான கரிசல்நிலமாயும் நீர்வளமுள்ளதாயுமிருக்கிறது. குறைவின்றி மழைபெய்வதால் இங்கு நேர்த்தியான வேளாண்மை முறைமையும், குடிவளமும் அமைந்திருக்கின்றன. இந்த நாட்டில் நெடுக நாகபுரியிலிருந்து பம்பாய்க்குப் போகும் இருப்புப்பாதை போகிறது. இந்தியாவிலுள்ள செழிப்பான கரிசல் நிலங்களில் இந்த நாடு ஒன்று. வருஷந்தோறும் பெய்யும் மழை சொற்பந்தான்; பூமி தேகத்திற்கு அதிக ஆரோக்கியமானது.

**ஜனத்தொகை, பாஷை:**—இந்த மாகாணத்தின் ஜனத்தொகை 30,00,000. இதில் 10ல் 9 பாகம் இந்துக்களாயும், மற்றவர்கள் மகம்மதியர்களாயுமிருக்கிறார்கள். தென்கிழக்கிலுள்ள பிரதேசத்தில் தெலுங்கு பாஷையும், மற்றெங்கும் மகாராஷ்டிர பாஷையும் வழங்குகின்றன.

**விவசாயம், வர்த்தகம்:** — பருத்தியும், சோளமும், கோதுமையும், ஆமணக்கும் பிரதானமான விளைபொருள்கள். பருத்தியும், கோதுமையும், ஆமணக்கும் ஏற்றுமதிச் சரக்குகள். சிரேஷ்டமான நிலக்கரியுள்ள இடங்கள் பல உண்டு.

**முக்கிய பட்டணங்கள்:**—அமராவதி இந்த நாட்டில் சிரேஷ்டமான செல்வம் நிறைந்த பட்டணம். பருத்தி வியாபாரம் இங்கு மிகுதியாய் நடக்கிறது. இங்கு சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் விசேஷமாய் வசிப்பதால் இதை இராஜதானி யென்னலாம்.



## 3. மைசூர் இராஜ்யம்.

**இருக்குமிடம், பரப்பு:**—இந்தப் பெரிய சமஸ்தானத்தின் எல்லைகளாவன: வடக்கே பல்லாரியும் அனந்தபுரமும்; கிழக்கே கடப்பையும், வடஆற்காடும், சேலமும்; தெற்கே கோயம்புத்தூரும், நீலகிரியும்; மேற்கே மலையாளமும், குடகும், தென்கன்னடமுமாம். இதின் பரிமாணம் சென்னை இராஜதானியின் நான்கு ஜில்லாக்களுக்குச் சரியானது. பரப்பு 25,000 சதுரமைல்; இதன் அதிக நீளம் இதன் அதிக அகலத்தைப்போலவே 225 மைல் இருக்கிறது.

**தோற்றம்:** — இந்த இராஜ்யம் தக்ஷிணத்தின் தென்பாகமாயிருக்கிறது. மேற்கேயுள்ள மலைப்பிரதேசங்களில் காடுகள் மிகுதி; ஆறுகள் பல; பெய்யும் மழை வெகு அதிகம். கிழக்குப் பாகமெல்லாம் சமவெளி. இந்த இராஜ்யமெங்கும் துர்க்கமென்று சொல்லப்படும் கற்குன்றுகள் ஏராளமாயிருக்கின்றன. அவைகள் பெரும்பாலும் 4,000 அடிமுதல் 5,000 அடிவரையில் உயர்ந்தவைகள். இவைகள் முற்காலத்தில் பாளையக்காரர்களுக்குக் கோட்டைகளாக உதவின. இங்கு பூமியானது ஓர்விதமல்ல; வடக்கிலெங்கும் கரிசல் பூமி, கிழக்கில் செம்மண். இம்மண் கேழ்வரகு சாகுபடிக்கு நேர்த்தியானபடியால் இப்பயிர் அதிகமாய் இங்கு உண்டாகிறது. மத்தியில் நீர்வளம் சொற்பமாயும் பூமியானது பாறையாயுமிருக்கிறபடியால் அங்கு ஆடுமாடுகளுக்கு மேய்ச்சலுக்கு உபயோகப்படுகிற புல்லைத்தவிர வேறொன்றும் உண்டாகாது. தெற்கே காவேரியும் அதன் உபநதிகளும் பாயுமிடங்களில் வாய்க்கால்கள் மூலமாய் சாகுபடிக்கு வேண்டிய நீர் பாய்ச்சுகிறார்கள். மற்ற விடங்களில் சாகுபடிக்குத் தண்ணீர் குளங்களிலிருந்து வருகிறது.



இந்த இராஜ்யத்தில் இத்தன்மையான குளங்கள் 40,000 க்குக் குறைவில்லை.

**மலை, ஆறு:**—கிழக்குத் தொடர்ச்சிமலையும் மேற்குத் தொடர்ச்சிமலையும் இங்குள்ள முக்கியமான மலைத் தொடர்கள். மேற்குத் தொடர்ச்சிமலையில் **குதிரைமுகம்** என்பது 6,200 அடி உயரமான வெகு உன்னதமான சிகரம். **பிளிகிரி ரங்கன்** மலை கிழக்கு மலைத் தொடரில் அதிக உன்னதமானது. இந்த மலை மைசூருக்கும் கோயம்புத்தூருக்கும் மத்தியில் 11 மைல் தூரம் எல்லையாயிருக்கிறது. **பாபபூதம்** அல்லது **சந்திரத்ரோண** வென்னும் தொடர், மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து சொற்பதூரமா யிருந்தபோதிலும் அம்மலையின் ஒரு பாகமாயிருக்கிறது. இது வடமேற்குத் திசையாய் 35 மைல் நீளமுள்ளது. சமுத்திர மட்டத்திற்குமேல் இது சுமார் 6,000 அடி உயர்ந்திருக்கிறது. தென்னிந்தியாவில் முதலில் காப்பி பயிரிடப்பட்டது இம்மலையில்தான். துர்க்கமென்னும் பேரையுடைய அநேக குன்றுகளில் **நந்திதுர்க்கம், சித்திரதுர்க்கம்** பிரதானமானவை. வடக்கில் பிரதானநதி **துங்கபத்திரை;** தெற்கில் பிரதானமானது **காவேரியாறு.** இந்த இராஜ்யத்தின் கிழக்குப்பாகத்தில் நந்திதுர்க்கத்துக்கருகில் **வடபெண்ணையும், தென்பெண்ணையும்** இவ்வாறுகளுக்கு மத்தியில் **பாலாறும்** உற்பத்தியாகின்றன. மேற்குத் தொடர்ச்சிமலையில் துங்காவும் பத்திராவும் உற்பத்தியாகி, சிவமொக்காவிற்கு அருகில் ஒன்றாய்ச் சேர்ந்து துங்கபத்திரை நதியாகின்றன. இது கர்நூலுக்குச் சொற்பதூரத்தில் கிருஷ்ணா நதியில் கலக்கிறது. **காவேரி** குடகில் உற்பத்தியாகி அதன் உபநதிகளுடன் மைசூரின் தென்பாகத்தில் பாய்கிறது. இக்காவேரியாற்றில் சிவசமுத்திர மென்னுமிடத்தில் ஓர் அழகான நீர்வீழ்ச்சி (Waterfalls) உண்டாகிறது. இந்நீர்வீழ்ச்சியைப் பார்ப்பதற்காக அநேக ஜனங்கள் இவ்விடம் வருகிறார்கள். இந்நீர்வீழ்ச்





CAUVERY FALLS.—காவேரி நீர்வீழ்ச்சி.



சியை யனுசரித்த ஆச்சரியமான விஷயமென்னவெனில் இந்நீர்வீழ்ச்சியினின்று ஓடுகிற ஜலத்தின் வல்லமையினால் இப்பால் சில சாமர்த்தியமுள்ள என்ஜினீர்கள் மின்சாரத்தை உண்டுபண்ணுகிறார்கள். இந்த மின்சாரம் தந்தி கம்பிகளைப்போன்ற கம்பிகள் மூலமாய் 90 மைல் தூரத்திலுள்ள கோலாருக்கு கொண்டுபோகப்பட்டு அவ்விடத்திலுள்ள தங்க சுரங்கங்களினின்று வெட்டியெடுக்கப்படும் தங்கத்தை சுத்தி செய்கிற யந்திரங்களை சுற்றும்படி செய்கிறது. இந்த நதிகளெல்லாம் கிழக்குநோக்கி ஓடி வங்காளக் குடாக் கடலில் விழுகின்றன. மேற்காய் ஓடுகிற நதி **சேராவதி** ஒன்றுதான். இது மேற்குத் தொடர்ச்சிமலையில் வெகுதூரம் சென்று 1,000 அடி உயரமான பாறையிலிருந்து அருவியாக விழுந்து வடகன்னடத்தில் பிரவேசிக்கிறது. **ஜர்ஸப்பா**வென்னும் இந்த பிரசித்தமான ஆகாசகங்கை உலகத்திலுள்ள பெரியவைகளிலொன்று.

**ஜனத்தோகை, பாஷை:**—இந்த இராஜ்யத்தின் ஜனத்தொகை சுமார் 48,40,000. இத்தொகையில் வெகுவாய் எல்லோரும் இந்துக்கள்; மற்றவர்கள் மகம்மதியர்கள். இந்துக்களில் 5 லட்சம் ஜனங்கள் **லிங்கம்கட்டி** என்னும் ஓர் ஜாதியார்; இவர்களின் தொழில் வர்த்தகம். இந்த இராஜ்யத்தில் அநேக ஜயினர்களுமுண்டு; இங்கெங்கிலும் வழங்குவது கன்னடபாஷை. ஆயினும் வடகிழக்குப் பாகத்தில் தெலுங்கு பேசுகிறார்கள். மகம்மதியர்கள் பேசுவது ஹிந்துஸ்தானி.

**போக்குவரவுக்குரிய சாதனங்கள்:** — ஜோலார் பேட்டையிலிருந்து ஒரு கிளை இருப்புப்பாதை கிழக்கிலிருந்து இந்த இராஜ்யத்தில் பிரவேசித்து பெங்களூருக்குப் போகிறது. பெங்களூரிலிருந்து மைசூர் நகரத்துக்கு வேறு ஒரு இருப்புப்பாதை போகிறது. பெங்களூரிலிருந்து இன்னுமோர் இருப்புப்பாதை வடமேற்காய் ஹரிஹரத்துக்குப் போகிறது. இப்பாதை அப்புறம்



பம்பாய் இராஜதானியில் பிரவேசித்து பம்பாய்ப் பட்டணத்திற்குப் போகிறது. இந்த இராஜ்யமெங்கும் இருபக்கமும் விருக்ஷங்களின் நிழலையுடைய நேர்த்தியான சாலைகளுண்டு. தென்னிந்தியாவில் வெகு சிலாக்கியமானவையெனச் சொல்லத்தகும் சத்திரங்களும், பங்களாக்களும் அங்கங்கே கட்டப்பட்டிருக்கின்றன.

**விவசாயம், வர்த்தகம்:** — முக்கியமாய்க் கேழ்வரகும்; கொள்ளு, நெல், பயறுகள், எள்ளு, ஆமணக்கு இவைகளும் பயிரிடப்படுகின்றன. **மூலநாட்டில்** காப்பியும் பாக்கும் பயிரிடுகிறார்கள். வடக்கே சித்திரதுர்க்கத்தில் கரிசல் பூமி இருக்கிறபடியால் அங்கு அதிக பருத்தி உண்டாகிறது. சந்தனமரம் மலை அடிவாரத்திலுள்ள காடுகளில் முக்கியமாய் விளைகிறது. ஜனங்களில் பெரும்பான்மையோர்க்கு ஜீவாதாரமான கேழ்வரகு மழைபெய்தால்தான் விளையும். இந்த இராஜ்யத்தில் தானிய வியாபாரம் அதிகமாய் நடக்கிறது. பெங்களூர் வர்த்தகத்துக்குப் பிரதான ஸ்தலம். காப்பிக்கொட்டை, மங்களூருக்கும் தலைச்சேரிக்கும்; கொள்ளு, பாக்கு, கேழ்வரகு, பக்கத்திலுள்ள ஜில்லாக்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. கோலார் ஜில்லாவிலும் வேறு சில விடங்களிலும் விலையுயர்ந்த தங்கச் சுரங்கங்களுண்டு. பலவிடங்களில் இரும்பு வெட்டியெடுத்து வேலைக்கு உபயோகப்படுத்துகிறார்கள். பெங்களூரில் சமுக்காளமும், சித்திரதுர்க்கத்தில் கம்பளமும் நெய்யப்படுகின்றன.

**அரசாட்சி:** — இந்த இராஜ்யம் இங்கிலீஷ் துரைத்தனத்தாரால் ஆதரிக்கப்படுகின்றமையால் அவர்களுக்கு இந்த இராஜ்யத்தின் அதிபதி வருஷந்தோறும் கப்பம் கட்டுகிறார். இவ்வதிபதி **மகாராஜா** என்னும் பட்டப் பெயரையுடையவர். அவருக்கு உதவியாக ஒரு திவானும் ஆலோசனைச் சங்கத்தாரும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இங்கிலீஷ் இராஜ்யத்தில் நடப்பதுபோலவே இங்கு பெரும்பாலும் அரசாட்சி நடக்கிறது.



**முக்கிய பட்டணங்கள்:**—இந்த இராஜ்யத்தின் அதிக பெரிதான பட்டணமாகிய **பெங்களூர்** மஹாராஜா சில காலம் வசிக்குமிடமாயும், பிரிட்டிஷ் ரெசிடெண்டின் பிரதான வாசஸ்தலமாயுமிருக்கிறது. இங்கு ஐரோப்பியரின் ஜனத்தொகை அதிகம். இப்பட்டணம் கடல் மட்டத்திற்குமேல் 3,100 அடி உயர்ந்திருப்பதால் தென்னிந்தியாவில் இதற்குச் சமமான தேக ஆரோக்கியமுள்ள இடமில்லை. இங்கு செய்யப்படுகிற கம்பளம் விசேஷமானது. இந்த இராஜ்யத்தின் இராஜதானியாகிய **மைசூர்** நகரம் மஹாராஜா பெரும்பாலும் வசிக்குமிடம். பெங்களூரிலிருந்து இதற்கு இருப்புப்பாதையுண்டு. ஹைதர் அலியும் திப்பு சுல்தானும் ஆண்ட காலத்தில் இராஜதானியாயிருந்த **ஸ்ரீரங்கப்பட்டணம்** காவேரியாற்றின் மத்தியிலுள்ள ஓர் தீவிலிருக்கிறது; இது மைசூரிலிருந்து 10 மைல் தூரத்திலிருக்கிறது. இங்கு ஜனங்களுக்குக் காய்ச்சலுண்டாகிறபடியால் இது வெகுவாய்க் குடிகளில்லாமல் பாழாய்க்கிடக்கிறது. மற்றோர் முக்கியமான பட்டணம் **சிவமோக்கா;** இது துங்கா நதியோரத்திலிருக்கிறது. சிங்கேரி யென்னுமிடத்தில் ஸ்ரீசங்கராசாரியாரவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட மடம் ஒன்றுண்டு. இங்கு ஸ்மார்த்தர்களின் முக்கிய குரு வசிக்கிறார். பெங்களூருக்குக் கிழக்கில் அதிக [illegible] பட்டணம் **கோலார்.** இதற்கு 5 மைல் தூரத்தில் கோலார் தங்கச் சுரங்கமிருக்கிறது. வடக்கே **சித்திரதுர்க்க**மென்னும் மலைக்கோட்டையின் அடிவாரத்தில் இதே பேரையுடைய ஒரு புராதனமான பட்டணமிருக்கிறது.





PROCESSION AT SRINGERI.—சிங்கேரியில் [illegible] ஊர்கோலம்.



# 6-வது அத்தியாயம்.

## பிரிட்டிஷ் மாகாணம்.

### 1. குடகு.

**இருக்குமிடம், பரப்பு:**—இந்த மாகாணம் தென்னிந்தியாவில் சென்னை இராஜதானியை அடுத்திருந்தபோதிலும் இந்தியா கவரன்மெண்டாரின் மேல்விசாரணைக்குள்ளிருக்கிறது. மைசூர் ரெசிடெண்டாயும் குடகு நாட்டின் சீப் கமீஷனராயுமுள்ள உத்தியோகஸ்தரின் ஏவலைச் செய்யும் கமீஷனரால் இந்த மாகாணத்தின் அரசாட்சி நடந்துவருகிறது. வடக்கிலும் கிழக்கிலும் மைசூரும், மேற்கிலும் தெற்கிலும் தென்கன்னடம், மலையாளம் இந்த ஜில்லாக்களும் இதன் எல்லைகளாம். இந்த நாட்டின் அதிக நீளம் 60 மைல்; அதிகஅகலம் 40 மைல்.

**தோற்றம்:**—மேற்குத் தொடர்ச்சிமலையின் கிழக்குப் பக்கத்தில் 60 மைல் தூரம் சரிவாயிருக்கிற மலைப்பிரதேசமும் மலையடிவாரத்திலுள்ள அகலமற்ற நாடும் சேர்ந்து குடகு மாகாணமாகிறது. மலையின் கிழக்குச் சாரலில் உள்ள பிரதேசங்களெங்கும் காப்பித்தோட்டங்கள் நிரம்பியிருக்கின்றன. பூமியானது மிதமான சீதோஷ்ணமுள்ளதாயும் நீர் சுவறினதாயுமிருக்கிறது. பிரதான பட்டணமாகிய மடிகேரியில் வருஷந்தோறும் ஏராளமான மழை பெய்கிறது.

**மலை, ஆறு:**—மேற்குத்தொடர்ச்சிமலையின் சிகரத்திலிருந்து கிழக்குப்புறம் சரிவாயுள்ளதெல்லாம் குடகு நாடாயும், மேற்குப்புறம் சரிவாயுள்ளதெல்லாம் தென்கன்னடம், மலையாளம் இந்த ஜில்லாக்களாயுமிருக்கின்றன. முக்கியமான நதியாகிய **காவேரி** இந்த நாட்டிலேயே **தலைக்காவேரி** என்னுமிடத்தில் மேற்குத்தொடர்ச்சிமலையில் உற்பத்தியாகி கிழக்கே மைசூரில் பிரவேசிக்கிறது.



**ஜனத்தொகை, பாஷை:**—இந்த இராஜ்யத்தின் ஜனத்தொகை 1,72,000. காப்பித்தோட்டங்களில் கூலி வேலைக்காகப் பருவகாலத்தில் மாத்திரம் மைசூர், தென்கன்னடம், மலையாளம் இவ்விடங்களிலிருந்து கூலியாட்கள் இந்நாட்டுக்கு வருகிறார்கள். மொத்த ஜனசங்கியையில் இவர்கள்மாத்திரம் ஏறக்குறைய 3ல் ஒருபாகம். பெரும்பான்மையோர் இந்துக்கள். மற்ற ஜனங்கள் விசேஷமாய் மகம்மதியர்கள். சில கிறிஸ்தவர்களுமுண்டு. குடகுநாட்டாரென்கிறவர்கள் வேறொரு ஜாதியார்; இவர்களின் தொகை 28,000; இவர்கள் அதிக இலக்ஷணமுள்ளவர்கள். தங்கள் ஜாதிக்குரித்தான ஓர் உடை உடுக்கிறார்கள். பிரிட்டிஷ் துரைத்தனத்தாரிடத்தில் இவர்கள் அதிக பட்சம் பாராட்டினமையால் யுத்தாயுதங்களை வைத்துக்கொள்ள அத்துரைத்தனத்தாரின் அனுமதி இவர்களுக்குக் கிடைத்திருக்கிறது. இந்த நாட்டில் சாதாரணமாய் வழங்கும் பாஷை கன்னடமாயினும் இச்சாதியார்கள் பேசுவது வேறு ஓர் பாஷை.

**விவசாயம், வர்த்தகம்:**—பள்ளத்தாக்குகளிலெங்கும் முக்கியமாய் நெல்லும் மலைச்சாரலிலுள்ள தோட்டங்களில் காப்பியும் பயிரிடுகிறார்கள். ஏலக்காய் காடுகளில் தானாகவே உண்டாகிறது. காப்பிக்கொட்டையும் ஏலக்காயும் மங்களூருக்கும், தலைச்சேரிக்கும், பெங்களூருக்கும் ஏற்றுமதியாகின்றன.

**முக்கிய பட்டணங்கள்:**—பிரதான பட்டணமாகிய **மடிகேரியில்** ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் வசிக்கிறார்கள். **வீராஜேந்திரப்பேட்டை** யென்று சாதாரணமாய்ப் பேர்வழங்கும் **வீரராஜேந்திரப்பேட்டை** தென்பாகத்திலுள்ள ஓர் பெரிய பட்டணம்.



# இரண்டாம் பாகம்.

## சூரியனும் அதைச்சார்ந்த கிரகங்களும்.

**நாம்** வாசம்செய்யும் பூமியானது நம்மைச் சுற்றி நான்குதிசையிலும் பரவி அசைவின்றி ஸ்திரமாயிருக்கிற ஒரு பெரிய சமவெளியாகத் தோன்றுகிறது. வானமானது வில்லைப்போல் வளைந்து நீலநிறமான மண்டபம்போல நம்மைச் சுற்றி எவ்விடத்திலும் பூமியைத் தொடுவதாய்க் காணப்படுகின்றது. பகலில் சூரியன் ஓர் பெரிய அக்கினிகோளம்போல கிழக்கில் காலமே உதயமாகி ஆகாயமார்க்கமாய் யாத்திரைசெய்து மேற்கில் பூமிக்குள் அல்லது சமுத்திரத்துக்குள் அஸ்தமிக்கிறதாக நாம் காண்கிறோம். அவ்விதமாகவே இரவில் சந்திரனும் வானத்தில் நக்ஷத்திரங்களுக்கிடையில் செல்லுகிறதாகத் தோன்றுகிறது. சந்திரனானது நக்ஷத்திரங்களைப்பார்க்கிலும் அதிக பெரிதாய்க் காணப்படுகிறது. பூமியானது சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள் இவைகள் எல்லாவற்றைக்காட்டிலும் பெரிதாய்த் தோன்றுகிறது. ஒரு யஜமானனிடத்தில் அவன் இட்டவேலை செய்வதற்கு வேலைக்காரர்கள் காத்திருப்பதுபோலப் பகலில் வெளிச்சம் கொடுக்கச் சூரியனும், இரவில் வெளிச்சம் கொடுக்கச் சந்திரனும், நக்ஷத்திரங்களும், இப்பூமியைச் சுற்றி வருவதாகக் காண்கிறோம்.

ஆகிலும் நாம் பார்க்கும்பொருள்கள் எல்லாம் அவை தோற்றும்வண்ணம் எப்பொழுதும் இருப்பதில்லையென நீங்கள் அறிவீர்கள். வாஸ்தவமாகவே வானமானது பூமியைத் தொடுகிறதில்லையென்று நமக்குத் தெரியும்.






ஏனென்றால் அப்படித் தொடுகிறதாகக் காணப்படும் இடத்திற்கு நாம் போய்ப் பார்ப்போமாயின் அங்கிருந்தும் வானம் முன்போலவே தூரத்தில் இருக்க காண்கிறோம். தத்துவத்தை ஆலோசிக்குங்கால் விசாலமான சமவெளியாகத் தோற்றும் இப்பூமி உண்மையாகவே ஒரு பெரிய கோளவடிவாயிருக்கிறது. பூமியானது அசைவின்றி நிலையாய்க் காணப்பட்டபோதிலும் நமது மனதிற்கு எட்டாத வேகத்தோடு அதன்மீதுள்ள நம்முடனும் மற்ற வஸ்துக்களுடனும் ஓடிக்கொண்டிருக்கிறது. சூரியனானது பூமியிலும் வெகு சிறிதாய்த் தோன்றினாலும் உண்மையில் சிறிதல்ல. பத்துலக்ஷம் மடங்கு பெரிது. சூரியன் நமக்கு வெகுதூரத்தில்

இருப்பதனாலேதான் அதிகச்சிறிதாய்க் காணப்படுகிறது. சூரியன் நமக்கு பத்துக்கோடிமைல் தூரத்திலுள்ளது; தவிர, சூரியன் பூமியைச் சுற்றுவதாகக் காணப்பட்டாலும் பூமியானது சூரியனுடைய ஏவலாள்போல அதை விடாமல் சுற்றிக்கொண்டுவருகிறது.

பூமியானது சமவெளியாகத் தோற்றுகிறதே; அப்படியிருக்க அது பந்துபோல் கோளவடிவாய் இருக்கிறதென்று நாம் எப்படி நம்பலாமென்றாலோ அது கோளவடிவுதான் என்று நிச்சயிக்கப் பல காரணங்களுண்டு; சில காரணங்கள் இங்கு கூறப்படும். ஒரு பந்தையாவது ஒரு கிச்சிலிப்பழத்தையாவது ஒருஎறும்பு ஒரே திசையாய்ச் சுற்றிவந்தால் அது புறப்பட்ட இடத்திற்கே மறுபடியும் வந்து சேரும். அதுபோல ஒருவன் பூமியில் ஒரு இடத்திலிருந்து புறப்பட்டு ஒரே திசையாய் யாத்திரை செய்வானானால் பலமாதங்களுக்குப்பின் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேருவான். இக்காலத்தில் புகைவண்டியும் புகைக்கப்பலும் இருப்பதால் அவை மூலமாய் ஜனங்கள் பலமுறை பூமியைச் சுற்றி வந்திருக்கிறார்கள். அப்படிச் சுற்றி வரவேண்டிய தூரம் 25,000 மைல் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.






நாம் ஒரு மைதானத்தில் நின்று சுற்றிலும் பார்ப்போமானால் வானம் பூமியைத் தொடுவதாகத் தோன்றுமிடம் ஒரு விருத்தம்போல் நம்மைச் சுற்றியிருப்பதாகக் காண்கிறோம். பூமியானது கோளவடிவா யிருப்பதினாலேதான் இப்படித் தோன்றுகிறது. பூமி வேறுவடிவுள்ளதாயிருந்



தால் நம்மைச் சுற்றிலும் காணப்படும் வட்டவடிவு வேறுவடிவாகவே இருக்கவேண்டுமென்பதை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்த்தால் தெரிந்துகொள்ளலாம்.

நாம் கடற்கரையினின்று துறைமுகத்தை விட்டுப் போகும் ஒரு கப்பலைப் பார்த்துக்கொண்டிருந்தால் அக்கப்பலின் பெருத்த அடிப்பாகம் கொஞ்சதூரம் சென்றபின் மறைந்துபோகிறது. பின்பு பாய்மரத்தின் அடிப்பாகமும் அதன்பின் அதன் நடுப்பாகமும் கடைசியில் அதன் உச்சியும் இவ்விதமாய்க் கப்பல் முழுவதும் நம்முடைய திருஷ்டியிலிருந்து மறைந்துபோவதைக் காண்கிறோம். அக்கடலோரத்தில், ஒரு பெரிய கோபுரம் இருக்குமாயின் அதன்மீது ஏறிப்பார்த்தால் திருஷ்டியிலிருந்து மறைந்து கடலில் சென்றுகொண்டேயிருக்கிற அக்கப்பலின் அடிப்பாகத்தை மறுபடியும் நாம் பார்க்கலாம். முன் மறைந்துபோனதற்குக் காரணம் அக்கப்பல் தூரமாய்ப் போய்விட்டதினால்தான் என்று சொல்வது கூடாது. அக்காரணம் சரியானால் நாம் கோபுரத்தின் மீதிருந்தும் கப்பலைப் பார்க்க முடியாமலிருக்கும். உலகமானது கோளவடிவாயிருப்பதால் நாம் உயரமான கோபுரம் அல்லது மலைமீது செல்லச்செல்ல வரவரப் பெரிய வட்ட வடிவாய் சுற்றிலும் அக்கோளத்தின் அதிக பாகத்தைப் பார்க்க நேரிடுகிறது. இக்காரணத்தினால் கடற்கரையினின்று மறைந்துபோன கப்பல் கோபுரத்திலிருந்து பார்த்தபோது மறுபடி காண நேர்ந்தது. பூமி கோளவடிவா யில்லாமல் தட்டையாயிருந்தால் கப்பலின் பாய்மரம் சிறியதாயிருப்பதால் முதலில் மறையவும் பருமனான அதன் அடிப்பாகம் பிற்பாடு மறையவும் வேண்டும். அப்படிக்கில்லாமல் ஏதோ ஒன்று கப்பலின் அடிப்பாகத்தை முதலிலும் அது அதிக தூரத்தில் போகப்போக அதன் பாய்மரத்தை கடைசியிலும் மறைப்பதினால்தான் இப்படிச் சம்பவிக்கிறது. அப்படி மறைப்பது எதுவென்று யோசித்தால் அது இப்பூமியின் வளைந்திருக்கிற ஓர் பாகமே. அவ்



வளைந்த பாகத்திற்குக் கீழே கப்பல் செல்லச் செல்ல நாம் உயரமான இடத்தில் மேல்மேலும் ஏறிப் பார்த்தால் வெகுதூரம் கப்பல் போன பின்னும் அதைப் பார்க்கலாம். இவ்விதமாகவே நாம் இப்பூமியில் எவ்வூரிலிருந்து பிரயாணம் செய்தாலும் திரும்பிப் பார்த்துக்கொண்டே போனால் முதலில் அவ்வூரில் தாழ்ந்த வீடுகள் மறைந்துபோம். இப்படி பூமியின் கீழ்ப்பாகத்திலிருந்து பொருள்கள் மறைந்துகொண்டுபோகக் காரணம் என்னவெனில் அப்பூமியின் வளைந்தபாகம் நமது பார்வைக்கும் அப்பொருள்களுக்கும் மத்தியில் வந்து மறைப்பதுதான். பூமியானது எங்கும் இப்படி வளைந்துகொண்டிருந்தால் அதன் உருவம் சந்தேகமின்றி கோளமல்லவா? ஒரு பந்தின்மேல் நேர்த்திசையில் சுண்ணாம்புக் கட்டியினால் கோடுகள் வரைந்தால் அக்கோடுகள் எல்லாம் வட்டவடிவாயிருக்கும். எவ்வடிவமுள்ள பொருளில் இவ்வட்டவடிவமுள்ள கோடுகள் வரையக்கூடுமென்று யோசித்துப் பார்த்தால் கோளவடிவமுள்ள பொருள்கள் தவிர வேறு எவ்வடிவமுள்ள பொருள் மேலும் வட்டமான கோடுகள் வரைய முடியாதென அறிவீர்கள். இக்கோள வடிவுக்கு இன்னுமொரு திருஷ்டாந்தம் சொல்லுவோம். பூமியானது சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையில் வருகையில் சந்திரக்கிரகணம் உண்டாகிறது. அக்கிரகணம் தொடங்குவது முதல் கவனித்துப் பார்த்தால் பூமியின் நிழலானது பூரண சந்திரன்மீது கொஞ்சங் கொஞ்சமாய்ப் பரவி அச்சந்திரனை நம்முடைய திருஷ்டியிலிருந்து மறைக்கிறது. அச்சந்திரன் மீதுள்ள நிழலைப் பார்க்கும்பொழுதெல்லாம் பூமியாலுண்டான அந்நிழல் வில்வளைவாயே இருக்கிறது. ஒரு அறையிலுள்ள மேஜையில் ஒரு விளக்கை வைத்து அதற்கு நேரே ஒரு உருட்சியான பானையை ஒரு சுவற்றின்மீது அதின் நிழல்படும்படி பிடித்துப் பார்த்தால் அந்நிழல் வட்டவடிவாயிருக்கக் காண்பீர்கள்.



இவ்விடத்தில் சூரியக்கிரகணத்துக்குங் காரணம் கூறுவோம். அதுண்டாவது எப்படியெனில், சந்திரன் சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் வரும்போது சூரியனுடைய வெளிச்சம் நமது பார்வைக்குத் தோற்றாமல் அச்சந்திரன் மறைக்கிறது. சிலகாலங்களில் சந்திரக்கிரகணமும் சிலகாலங்களில் சூரியக்கிரகணமும் உண்டாவதற்கு காரணம் மேற்கூறிய பிரகாரம் பூமியானது சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையில் வருகையிலும் சந்திரன் சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் வருகையிலும் முறையே அக்கிரகணங்கள் உண்டாகின்றன. இக்கிரகணங்கள் குறிப்பிடப்பட்டிருக்கிற காலங்களில் சம்பவிப்பதால் அவை உண்டாகும் காலங்களை வான சாஸ்திரிகள் கணக்கிட்டு ஒவ்வொரு வருஷத்திலும் எவ்விதமான கிரகணங்களுண்டாகுமோ அவைகளை பஞ்சாங்கங்களில் தெரிவிக்கிறார்கள். இக்கிரகணங்கள் இவ்விதமான காரணங்களாலுண்டாகின்றனவென்று தெரிந்துகொள்ளுவதற்கு முந்தி முற்காலத்திலுள்ள ஜனங்கள் இராகு கேதுவென்னும் சர்ப்பங்கள் சூரியனையும் சந்திரனையும் விழுங்குவதாகவும் அதினால் இக்கிரகணங்கள் உண்டாவதாகவும் தப்பாய் நினைத்திருந்தார்கள்.



மேற்கண்ட நியாயங்களால் இப்பூமியானது ஓர் பெரிய கோளமென்றும் தெரிந்துகொண்டோம். தவிர பூமியானது ஓரிடத்தில் நிலையாயில்லாமல் சூரியனுக்கு பத்து கோடி மைல் தூரத்தில் அதிக வேகத்துடன் அதைச் சுற்றிவருகிறதெனவும் தெரிந்தோம். பூமி



சூரியனைச் சுற்றி ஒரு பிரதக்ஷணஞ் செய்ய 365 நாட்களடங்கிய ஒரு வருஷம் வேண்டும். பூமி சுற்றிக்கொண்டிருந்தால் அதன் அசைவு நமக்குப் புலப்படவில்லையே என்று நீங்கள் வினவலாம். பூமியானது எவ்வளவு வேகத்துடன் செல்லுகிறதோ அவ்வளவு வேகத்துடன் அதன்மீதுள்ள நாமும் மற்றப் பொருள்களும் செல்லுவதால் நமக்கு அந்த வேகம் தெரிகிறதில்லை. அதற்கு திருஷ்டாந்தமாக நாம் வேகமாய்ப் போகும் புகைக் கப்பலிலாவது புகை வண்டியிலாவது யாத்திரை செய்யும்போது கவனித்துப் பார்த்தால் அக்கப்பலிலும் புகை வண்டியிலும் உள்ள நாமும் மற்றப் பொருள்களும் அசையாமலிருப்பதுபோலும், அவைகளைச் சுற்றிக் கடலிலாவது தரையிலாவதுள்ள வஸ்துக்கள் வேகமாய் ஓடுவதுபோலும் தோன்றும். ஆகிலும் புகைக்கப்பலும் புகை வண்டியும் வெகு வேகமாய்ச் சென்றுகொண்டுதான் இருக்கின்றன. இவ்வாறே பூமி வெகு வேகமாய்ச் சென்றாலும் நமக்கு அதன் அசைவு தெரிகிறதில்லை. பூமியானது சூரியனைச் சுற்றி வருவதுமன்றி தன்னையே ஒரு பம்பரம் சுற்றுவதுபோல் சுற்றுகின்றது. அது செல்லும் வேகத்துடன் நாமும்கூட செல்லுவதால் அவ்வசைவு நமக்குப் புலப்படவில்லை. இந்தியாவிலுள்ள நாம் பூமி தன்னையே சுற்றுகையினால் ஒரு மணிக்கு 1,000 மைல் வேகத்துடன் நமக்குத் தெரியாவண்ணம் சுற்றிக்கொண்டே இருக்கிறோம். பூமி தன்னையே சுற்றுவதற்கு ஒரு பகலும் இரவுமாகிய 24 மணி நேரமாகிறது. இவ்விதமாய்ச் சுற்றும் பூமியில் சூரிய வெளிச்சம் படும்பாகத்தில் பகலாயும், அவ்வெளிச்சம் படாத பாகத்தில் இரவாயுமிருக்கிறது. இந்தியாவில் பகலானது சராசரி 12 மணி நேரமென்று சொல்லலாம். இரவும் பகலுமுண்டாவதற்குக் காரணத்தை விளக்க ஒரு திருஷ்டாந்தம் சொல்லுவோம். இரவில் ஒரு அறையில் விளக்கொன்று வைத்து ஒரு பெரிய பந்து அல்லது உருட்சி





யான பானையை விளக்குக்கு நேரில் வைத்துப் பார்த்தால் அதின் ஒரு பாதிமாத்திரம் பிரகாசமாயும் மற்ற பாதி இருளாயும் இருக்கும். இப் பந்தையாவது பானையையாவது நாம் ஒரு பம்பரம் சுற்றுவதுபோல சுற்றினால் விளக்கு வெளிச்சத்திற்கு நேரில் வரும் பாகம் பிரகாசமாயும் மற்றப்பாகம் இருளாயும் மாறிக்கொண்டேவரும்.

பூமியானது சூரியனைச் சுற்றுவதுபோல் சந்திரன் பூமியைச் சுற்றிவருகிறது. சந்திரன் பிரகாசமாய்க் காணப்பட்டாலும் இப்பூமியைப்போல் அது நீரையும் நிலத்தையுமுடைய ஓர் இருண்டகோளந்தான். இரண்டு கோளங்களும் சூரியனுடைய ஒளியால் பிரகாசிக்கின்றனவேயன்றி சுயமான ஒளி அவைகளுக்கில்லை. இப் பூமியின்மீதுள்ள நமக்குச் சூரியனுடைய ஒளியால் சந்திரன் பிரகாசிப்பதுபோல் நாம் பூமியைவிட்டு ஓர் நக்ஷத்திரத்தினிடம் சென்று பார்ப்பது சாத்தியமாயின் சூரிய ஒளியால் சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிரகாசிப்பதுபோல் இப்பூமியும் பிரகாசிக்கக் காண்போம். இதற்குத் திருஷ்டாந்தமாக முகம் பார்க்கிற ஓர் பெரிய கண்ணாடியை சூரியனுக்கு நேரே நாம் வைத்துப் பார்த்தால் சூரியபிம்பம் அதில் தோன்றுவதுந்தவிர அதின் ஒளி நமது கண்ணை பார்க்கக்கூடாமல் கூசும்படி செய்யும்.



இதனால் அக்கண்ணாடிக்கு சுதாவாகவே ஒளி இருக்கிறதென்று சொல்லக்கூடாதல்லவா. சந்திரன் பூமியைச் சுற்றிவருவதாக மேலே கூறப்பட்டது. இப்படி சுற்றுவதற்கு $29\frac{1}{2}$ நாள்கொண்ட ஓர் மாதமாகிறது. பூமியைப்பார்க்கிலும் சந்திரன் 50 மடங்கு சிறியது. அது பூமியை 2,40,000 மைல் தூரத்தினின்று சுற்றுவதுந் தவிர சூரியனைப் பிரதக்ஷணம் செய்யும் பூமி செல்லுமிடமெங்கும் தானும் பூமியைப் பிரதக்ஷணம் செய்து கொண்டுபோகிறது.



சூரியனைச் சுற்றும் கோளம் இப்பூமி மாத்திரமல்ல. கிரகங்கள் என்று சொல்லப்படும் வேறு கோளங்களும் சூரியனைச் சுற்றுகின்றன. வானத்தில் பிரகாசிப்பதெல்லாம் நக்ஷத்திரங்களல்ல; சிலவற்றிற்கு கிரகங்களென்றும் பேரிடப்பட்டிருக்கிறது. நக்ஷத்திரங்கள் ஓர் சிறு இரத்தினத்தைப்போல விட்டுவிட்டுப் பிரகாசிக்கும். அன்றியும் ஏதேனுமொரு நக்ஷத்திரத்திற்கும் மற்றொரு நக்ஷத்திரத்திற்குமுள்ள தூரம் வேறுபாடின்றியுமிருக்கும். இந்நக்ஷத்திரங்களும் நமது சூரியனைப்போல் சுயம்பிரகாசமாயும் கிரகங்களால் சுற்றி வரப்பட்டனவாயுமுள்ள பல சூரியர்களென்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.

கிரகங்களோ அப்படியல்ல, காற்றில்லாத ஓர் இடத்தில் ஓர் விளக்கு அசைவின்றி பிரகாசிப்பதுபோல் கிரகங்கள் பிரகாசித்துக்கொண்டு ஒவ்வொரு இரவிலும் தங்கள் ஸ்தானங்களைப் பேதித்து வானத்தில் செல்லுகின்றன. (1) சூரியனைச் சுற்றுவனவாயும், (2) சூரிய ஒளியால் பிரகாசிக்கின்றவையாயுமுள்ள கோளங்களுக்கெல்லாம் கிரகங்களென்று பேர். இவ்விரண்டு காரணங்களால் இப்பூமியும் ஓர் கிரகந்தான். நமக்குக் கிரகங்கள் எவ்விதமாகத் தோற்றுகின்றனவோ அவ்வண்ணமே நாம் நினைக்கக்கூடாத தூரத்திலிருக்கும் அக்கிரகங்களிலுள்ளவர்களுக்கும் இப்பூமியானது பிரகாசமான ஓர் சிறு புள்ளியைப்போல் தோற்றும்.



இக்கிரகங்களெல்லாம் தன்னைச் சுற்றிவரப்பெற்ற மகிமையுடைய சூரியன் சுதாவாகவே பிரகாசிக்கின்ற ஓர் மகா பெரிய அக்கினி கோளம். அதன் பருமன் பூமியைவிட 10 லக்ஷம் மடங்குக்கதிகம். அதிலுள்ள அக்கினியின் ஜ்வாலை பல நூறுமைல்கள் வியாபிக்கின்றது. ஆகையால் நாம் பிரமிக்கத்தக்க ஏராளமான ஒளியும் காங்கையும் அதிலிருந்து நான்குதிசைகளிலும் பரவுகின்றன. அது ஓரிடத்தினின்று சுழன்றுவருகிறது.

நானாவித காத்திரமுள்ள கிரகங்கள் பற்பல தூரத்திலிருந்து இச்சூரியனைப் பிரதக்ஷணஞ் செய்வதல்லாமல் பூமியைப்போல் தாங்களும் உருளுகின்றன. அவைகள் அநேகமா யிருந்தபோதிலும் முக்கியமானவை எட்டு. சூரியனுக்கும் அவைகளுக்குமுள்ள தூரத்தை உத்தேசித்து (1) புதன், (2) சுக்கிரன் அல்லது வெள்ளி, (3) பூமி, (4) அங்காரகன் அல்லது செவ்வாய், (5) பிரகஸ்பதி அல்லது குரு, (6) சனி, (7) யூரேனஸ், (8) நெப்தியூன் என்று வரிசையாய் சொல்லலாம். புதன் சூரியனுக்கு வெகு சமீபத்திலுள்ளதால் 88 நாளுள்ள ஒரு வருஷத்தில் அது சூரியனை ஒருவிசை சுற்றுகிறது. மற்றக்கிரகங்களை எல்லாம்விட அதிக தூரத்திலுள்ளது நெப்தியூன். இது 165 வருஷத்தில் ஒரு முறை சூரியனைச் சுற்றுகிறது. பருமனில் பெரிது குரு என்னும் கிரகம், அது பூமியினும், 1,000 மடங்கு பெரியது. நமது சந்திரன் பூமியைச் சுற்றுவதுபோல மற்றக் கிரகங்களைச் சுற்றிவரும் பல சந்திரர்களுண்டு. இப்பூமிக்கு ஒரு சந்திரன்தான்; ஆனால் குருவுக்கு நான்கு சந்திரர்கள், சனிக்கு எட்டு சந்திரர்கள், யூரேனஸுக்கு



நான்கு சந்திரர்கள் என கிரகங்களுக்கு பல சந்திரர்களிருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இவைகள் நமது திருஷ்டிக்குத் தோற்றா. தூரத்திலுள்ள பொருள்களைச் சமீபத்தில் காட்டும் தன்மையுள்ள கண்ணாடியை வைத்து வானத்தைப் பார்த்தால் இவைகளையும் இன்னும் பற்பல அற்புதக்காக்ஷிகளையும் பார்க்கலாம். சந்திரனிடத்திலுள்ள மலைகளையும் சமுத்திரங்களையும்கூடக் காணலாம்.

மேற்கூறிய சங்கதிகளை உபாத்தியாயர்கள் பல திருஷ்டாந்தங்களால் மாணாக்கர்களுக்குச் செவ்வையாய் விளக்கவேண்டும். ஓர் பெரிய கற்பலகையில் மத்தியில் சூரியனைக் குறிக்க சீமைச் சுண்ணாம்பில் ஒரு புள்ளி வைத்து அதற்குப் பற்பல தூரத்தில் 8 முக்கியமான கிரகங்களின் வரிசைப்படி 8 வட்டங்களை அப்புள்ளியைச்சுற்றி வரைந்து காட்டினால் சூரியனைக் கிரகங்கள் சுற்றிவரும் வினோதத்தை பிள்ளைகள் ஒருவாறு அறிந்துகொள்ளலாம். இப்பூமியும் மற்றக் கிரகங்களும் சூரியனை மத்தியாகக்கொண்டு அதைச் சுற்றிவருவதுபோல் ஆகாயத்தில் நாம் பார்க்கும் பல நக்ஷத்திரங்களும் சுயம்பிரகாசமான கோளவடிவுள்ள பல சூரியர்களாயிருக்கலாமென்றும் அவைகளைச் சுற்றி பல கிரகங்கள் ஓடலாமென்றும் வானசாஸ்திரிகள் உத்தேசிக்கிறார்கள்.

# மூன்றாம் பாகம்.

## கண்டங்களும் சமுத்திரங்களும்.

பூமியின் மேற்புறமானது நிலமும் நீருமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அதன் மேற்பரப்பை நான்கு பாகமாகப் பிரித்தால் அதில் மூன்று பாகம் நீருள்ளதாகவும் ஒரு பாகம் நிலமுள்ளதாகவும் சொல்லலாம். நிலத்தின் பெரிய பிரிவுகளுக்கு கண்டங்களெனவும் நீரின் பெரிய பிரிவுகளுக்குச் சமுத்திரங்களெனவும் பெயரிட்டிருக்கிறார்கள். கண்டங்களின் உட்பிரிவுகளுக்கு தேசங்களெனவும் சமுத்திரங்களின் உட்பிரிவுகளுக்கு கடல்களெனவும் பேர்கள் வழங்குகின்றன. உலகபடத்தை நீங்கள் பார்ப்பீர்களாகில் அதில் இரண்டு பாகங்களடங்கியிருப்பதாகக் காண்பீர்கள். வலதுபாரிசத்திலுள்ள பாகம் குணகோளார்த்தமென்றும் இடதுபாரிசத்திலுள்ள பாகம் குடகோளார்த்தமென்றும் பேரிடப்பட்டிருக்கின்றது. குணகோளார்த்தத்தை தொல்லுலகெனவும் குடகோளார்த்தத்தை நூதன உலகெனவும் சொல்லுவதுமுண்டு. குடகோளார்த்தமானது சில நூற்றாண்டுகளுக்கு முன்தான் கண்டுபிடிக்கப்பட்டமையால் அதற்கு நூதன உலகமெனப் பெயரிடலாயிற்று; குணகோளார்த்தத்தில் ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா, ஆஸ்ட்ரேலியா என்னும் நான்கு கண்டங்கள் அடங்கியிருக்கின்றன. குடகோளார்த்தத்திலுள்ள நாடு வடஅமெரிக்கா, தென்அமெரிக்காவென இரண்டு பாகங்களுள்ள அமெரிக்கா கண்டம்.

ஐரோப்பாவும் ஆசியாவும் ஜலத்தினால் பிரிக்கப்படாத ஏகநிலமாக விருக்கிறது. ஆப்பிரிக்காவோ ஆசி



யாவிலிருந்து சூயஸ் கால்வாயினுல் பிரிக்கப்பட்டிருக்கிறது. வட அமெரிக்காவும் தென் அமெரிக்காவும் பனுமா பூசந்தியினுல் சேர்க்கப்பட்டிருக்கின்றன. கண்டங்களில் பெரியது ஆசியா; சிறியது ஆஸ்ட்ரேலியா. ஐரோப்பாவானது ஆஸ்ட்ரேலியா வொழிந்த மற்ற கண்டங்களுக்கெல்லாம் சிறியதாளுலும் எல்லாக் கண்டங்களிலும் அதிக சிறப்புத்தங்கியது. இக்கண்டம் பூமியில் நிலமுள்ள பாகத்திற்கு மத்தியிலிருக்கிறது. நாகரீகத்திலும் பராக்கிரமத்திலும் ஐசுவரியத்திலும் நிகரற்ற தேசத்தார்களின் உறைவிடம் இக்கண்டமே. இதைச் சூழ்ந்திருக்கும் கடல்கள் மார்க்கமாய் இதன் பற்பல பாகங்களுக்குக் கப்பல்கள் செல்லக்கூடுமாகையால் இது வியாபாரத்தில் பிரபலமடையவேண்டுமென்றே இயற்கையாய் அமைக்கப்பட்டிருக்கிறதாகத் தோன்றுகிறது. இதில் கப்பல் போக்குவரவுக்குச் சாதனமாயுள்ள பல பேராறுகளுமுண்டு. சொற்ப பாகந்தவிர மற்றெங்கும் நீரால் சூழப்பட்ட நாட்டுக்கு தீபகல்பமென்று பெயர். இக்கண்டத்திலுள்ள தீபகற்பங்கள் பல; இதில் விசேஷ ஐசுவரியமுள்ள தேசமாகிய இங்கிலாண்டு முற்றிலும் நீரால் சூழப்பட்டிருக்கிற ஓர் தீவு.

ஆசியாவானது எல்லாக் கண்டங்களிலும் பெரிதாயும் சமுத்திர மட்டத்திற்குமேல் அதிக உன்னதமாயுமிருக்கிறது. இதிலுள்ள மலைகள் மகா உயரமானவை; பள்ளத்தாக்குகள் மிகத் தாழ்ந்தவை. இதிலடங்கிய தேசங்களின் சீதோஷ்ண ஸ்திதி நாளுவிதமானது. வடக்கில் சீதளமும் தெற்கில் உஷ்ணமும் வெகு மிகுதி. மற்றெல்லாக் கண்டங்களிலும் இங்கு குடிவளம் மிகவும் விசேஷம். தெற்கிலும் கிழக்கிலும் கடற்கரையில் பல கடல்களும் குடாக்கடல்களு மிருப்பதாலும், இவற்றில் சங்கமமாகின்ற பல ஆறுகளிருப்பதாலும் இப்பாகங்கள் வியாபாரம் நடத்த அனுகூலமாயிருக்கின்றன.






ஆப்பிரிக்காவானது மற்றக் கண்டங்களைப்பார்க்கிலும் நாகரீகத்தில் மிகக்குறைவுள்ளது. இதில் பேராறுகள் மிகச் சொற்பம். விரிகுடாக்கள் கொஞ்சமேனுமில்லை. இக்கண்டத்தில் பிரயாணஞ்செய்வது மிகவும் கஷ்டமாகையால் வியாபாரத்திற்கு அனுகூலமானதல்ல. உஷ்ணமோ இங்கு வெகு உக்கிரமாயிருக்கும்; இக்காரணங்களால் இந்தக் கண்டம் ஐரோப்பிய யாத்திரிகளால் செவ்வையாய்ப் பரிசோதிக்கப்படவில்லை.

அமெரிக்கா கண்டமானது பஸிபிக் சமுத்திரத்திற்கும் அத்லாண்டிக் சமுத்திரத்திற்கும் இடையிலிருக்கிறது; இதில் வடஅமெரிக்காவும் தென்அமெரிக்காவும் அடங்கியிருக்கின்றன. வட அமெரிக்காவிலுள்ள ஜனங்கள் பெரும்பாலும் சென்ற மூன்று நூற்றாண்டுகளில் ஐரோப்பாவி லிருந்துபோய்க் குடியேறின ஐரோப்பியர்கள்; இவர்கள் சிறந்த நாகரீகமடைந்தவர்கள். நேர்த்தியான ஆறுகளும் ஏரிகளும் இங்கு பல. ஆகையால் இங்கெங்கும் போக்குவரவு அதிக சுலபம். தென் அமெரிக்காவில் குடிவளமில்லை; இதின் உள்நாடுகளைப்பற்றிய விவரங்கள் நன்றாய்ப் பரிசோதித்து நிச்சயிக்கப்படவில்லை; இதில் விரிகுடாக்களில்லை. ஆனால் இங்கு பேராறுகள் அதிகம்; இவைகளில் ஒன்று உலகத்திலுள்ள ஆறுகளெல்லாவற்றிலும் பெரிது.

ஆஸ்திரேலியா எல்லாக்கண்டங்களிலும் மிகச் சிறியது; இதிலுள்ள ஆறு ஒன்றே. வியாபாரத்திற்கு இங்கு விசேஷமான அனுகூலமில்லை; இதின் மத்தியப் பிரதேசம் மனுஷ சஞ்சாரமில்லாத பெரு வனாந்தரம். சென்ற நூற்றாண்டில் குடியேறின ஐரோப்பியர்களே இங்குள்ள ஜனங்கள்; அவர்கள் கடற்கரையையடுத்த நாடுகளில் முக்கியமாய் வசிக்கிறார்கள்.

**சமுத்திரங்கள்:**—பூமியின் மேற்பரப்பிலுள்ள சமுத்திரங்கள் ஐந்து; இவ்வைந்தும் ஒன்றுக்கொன்று இடைவிடாமல் சம்பந்தப்பட்டிருக்கின்றன.



இவைகளாவன: — (1) உத்தர மகாசமுத்திரம், (2) தக்ஷிண மகாசமுத்திரம், (3) அத்லாண்டிக் மகாசமுத்திரம், (4) பஸிபிக் மகாசமுத்திரம், (5) இந்து மகாசமுத்திரம்.

உத்தர மகாசமுத்திரம் பூகோளத்தின் வடகோடியிலிருக்கிறது; இது வட்டவடிவுள்ளது. இதையடுத்த கண்டங்கள் ஐரோப்பாவும், ஆசியாவும், வடஅமெரிக்காவும். இச்சமுத்திரத்தில் அதிகுளிரால் கடனீர் உறைந்து அதனாலுண்டான பனிக்கட்டி பெரும்பாலும் இதை மூடிக்கொண்டிருக்கிறது. கப்பல் போக்குவரவு விசேஷமாயில்லை; ஆகையால் இச்சமுத்திரத்தின் பெரும் பாகத்தை எந்நாளும் மனிதன் கண்டதில்லை. இதன் ஓர் பாகமாகிய வைட்கடல் (White Sea) ஐரோப்பாவின் வடபாகத்திலிருக்கிறது.

தக்ஷிண மகாசமுத்திரம் பூகோளத்தின் தென்கோடியிலிருக்கிறது; இதன் நடுவேயுள்ள நாட்டை தூரத்திலிருந்து மாலுமிகள் பார்த்திருக்கிறார்களேயொழிய அந்நாட்டைக் கிட்டினவர்களில்லை. கடுங்குளிரால் எங்கும் கடனீர் ஒருபோதும் இளகாத உறைந்த பனிக்கட்டியாயிருக்கிறது; கப்பல் யாத்திரை இங்கு சற்றும் முடியாது.

அத்லாண்டிக் மகாசமுத்திரத்தில் இரண்டு பாகங்களுண்டெனக் கூறலாம்; ஐரோப்பாவிற்கும் வடஅமெரிக்காவுக்கும் இடையிலுள்ளது இச்சமுத்திரத்தின் வடபாகம். ஆப்பிரிக்காவிற்கும் தென் அமெரிக்காவுக்கும் இடையிலிருப்பது இதன் தென்பாகம். இச்சமுத்திரத்தில் கப்பல் வியாபாரம் வெகு விசேஷமாய் நடப்பதால் இதற்கு மற்றச் சமுத்திரங்களைப் பார்க்கிலும் சிறப்பு அதிகம். இதில் சங்கமமாகின்ற நதிகளாலும் இதற்குச் சிறப்புண்டு. இதைச்சார்ந்த பல கடல்கள் இதை யடுத்த கண்டங்களின் உள்நாட்டில் பிரவேசிக்கின்றன. இவற்றில் முக்கியமானவை,—ஐரோப்பாவிலுள்ள (1) வட கடல், (2) பால்டிக் கடல், (3) மத்திய



தைக் கடல்; அமெரிக்காவிலுள்ள (1) ஹட்ஸன் குடா, (2) மெக்ஸிகோ விரிகுடா, (3) கரிபியன் கடல்.

பஸிபிக் மகாசமுத்திரம் அத்லாண்டிக் சமுத்திரத்திலும் இரண்டுபங்கு விஸ்தீரணமுள்ள மகாசமுத்திரம். இது அமெரிக்காவிற்கும் ஆசியாவிற்கும் இடையிலிருக்கிறது. இங்கு முதற்றடவை யாத்திரைசெய்த மாலுமிகள் இச்சமுத்திரம் விசேஷமான அலைமோதாமல் அமரிக்கையாயிருந்தபடியால் அமரிக்கையான சமுத்திரமென்று பொருள்தரும் பஸிபிக் ஓஷன் என இதை அழைத்தார்கள். ஆகிலும் மற்றச் சமுத்திரங்களைப்போல இங்கும் கடும்புசல் அடிப்பதுண்டு. இதன் விசேஷம் யாதெனில் இங்கு பற்பலவிடங்களில் அதிக தீவுகள் கூட்டம் கூட்டமா யிருக்கின்றன. இதிலுள்ள முக்கியமான கடல்கள் ஆசியாவின் கிழக்குப்பாகத்திலுள்ள (1) ஜப்பான்கடல், (2) சீனக்கடல், (3) மஞ்சட் கடல்.

இந்து மகாசமுத்திரம் இந்துதேசத்திற்கு தெற்கிலுள்ளதால் அப்பேர் பெற்றது. இது தென் அத்லாண்டிக், தென்பஸிபிக் இவ்விரண்டிற்கும் மத்தியிலிருக்கிறது. இச்சமுத்திரமார்க்கமாய் (1) ஆசியாவிற்கும் ஐரோப்பாவிற்கும், (2) ஆஸ்திரேலியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் கப்பல் வியாபாரம் மிகுதியாய் நடக்கிறது. (1) செங்கடல், (2) பார்சீகக்குடா, (3) அரேபிக்கடல், (4) வங்காளக்குடா இவைகள் நான்கும் இச்சமுத்திரத்தின் முக்கியமான பிரிவுகள்.

Printed at the S. P. C. K. Press, Vepery, Madras—1904.



## மாக்மில்லன் கம்பெனியாருடைய
## சுதேச பாஷா புஸ்தகங்கள்.

இவை

**ஈ. மார்ஸ்டன், பி. ஏ.; அவர்கள்** *இயற்றியன.*

### தமிழிலும் தெலுங்கிலும் படத்தோடு கூடியவை.

*முதல் வாசக புஸ்தகம் வகுப்பு* I. ........ *விலை. அணா.* 2
*இரண்டாம் வாசக புஸ்தகம்* ,, II. ........ ,, ,, 2½
*மூன்றும் வாசக புஸ்தகம்* ,, III. ........ ,, ,, 3
*நான்காம் வாசக புஸ்தகம்* ,, IV. ........ ,, ,, 4
*ஐந்தாம் வாசக புஸ்தகம் பாரம்* I. ........ ,, ,, 5
*ஆறும் வாசக புஸ்தகம்* ,, II. ........ ,, ,, 5
*ஏழாம் வாசக புஸ்தகம்* ,, III. ........ ,, ,, 5
*எட்டாம் வாசக புஸ்தகம்* ,, IV. ........ ,, ,, 8
*ஒன்பதாம் வாசக புஸ்தகம்* ,, V. ........ ,, ,, 8

### மேற்படி வாசக புஸ்தகச் சார்புகள்.

*(பொருள் விளக்கம், பரீக்ஷை வினாக்கள் முதலானவைகளுடன.)*
*மூன்றும் வாசக புஸ்தகச் சார்பு* ........... *விலை. அணா.* 2
*நான்காம் வாசக புஸ்தகச் சார்பு* ........... ,, ,, 2

### தமிழிலும் தெலுங்கிலும் படத்தோடு கூடியவை.

*இந்துதேச சரித்திரம் (மிடில் ஸ்கூல்களுக்குரியது.)* ................................ *விலை. அணா.* 12
,, ,, *பாகம்* I. *பாரம்* I. ,, ,, 5
,, ,, ,, II. ,, II. ,, ,, 5

### தமிழிலும் தெலுங்கிலும் ஹிந்துஸ்தானியிலு முள்ளவை.

*சென்னை இராஜதானி பூகோள சாஸ்திரம் (பெரிய படத்துடன் நான்காம் வகுப்புக்குரியது.)* ................................ *விலை. அணா.* 5
*இலேசான இந்திய சரித்திர பாடங்கள் (பிரைமரி பாடசாலைகளுக்குரியது.)* ............... ,, ,, 4

### தமிழிலும் தெலுங்கிலு முள்ளவை.

*மூன்றுவது வகுப்பு பூகோளம் (பிரதி ஜில்லாவிற்கும்.)* ................................ *விலை. அணா.* 2

சென்னை: வேப்பேரி, எஸ். பி. ஸி. கே.
புஸ்தகசாலையில் விற்கப்படும்.

